# தர்மசக்கரம்





காளயுக்தி ஞு சித்திரை மீ சக்கரம் 27 ஆரம் 4

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை - 639 115 திருச்சி ஜில்லா

# கன்னியாகுமரியில் அந்தர்யோகம்

மே மாதம் 27, 28 சனி, ஞாயிறு ஆகிய தேதிகளில்

**இடம்:** ஸ்ரீ பகவதி அம்மன் கோவில். **நேரம்:** அதிகாலை 5-00 மணிமுதல் இரவு 10-00 மணிவரை வழக்கமான சாதனை முறைப்படி நடைபெறும்.

நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள்**

**இதர விவரங்கள்:** உணவு, ஜாகைக்காக நபர் ஒருவர் நாள் ஒன்றுக்கு 7 ரூபாய் விதம் ரூ. 14-00 மே மாதம் 22ஆம் தேதிக்குள் கன்னியாகுமரி மாவட்டம் ஈத்தாமொழி ஸ்ரீ கோம்பை சுவாமி கோவில் தர்மகர்த்தா திரு. S. தங்கவேல் நாடார் அவர்களுக்கு மணிஆர்டர் மூலமோ அல்லது நாகர்கோவில் தெற்கு ரதவீதி ராமலட்சுமி நிலையம் திரு. பொன்னையா ஐயப்பன் அவர்களிடம் நேரிலோ செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்து கொள்ளலாம். பணம் அனுப்புகின்ற முதல் நூற்று ஐம்பது பேர்கள் மட்டும் பதிவு செய்துகொள்ளப்படுவார்கள். பணம் அனுப்பிக் கலந்துகொள்ளாத அன்பர்களுக்குத் தொகை திருப்பித்தரப்படமாட்டாது. தாய்மார்களும் இதில் கலந்துகொள்ளலாம். பன்னிரண்டு வயதுக்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும், கைக்குழந்தையுடன் வரும் தாய்மார்களும், நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்கள். தங்கள் சௌகரியத்துக்குத் தேவையான படுக்கை முதலியவற்றைத் தாங்களே கொண்டுவரவேண்டும். மே 26ஆம் தேதி மாலையிலேயே யாவரும் வந்துசேரவேண்டும். 28-5-78 ஞாயிறு மாலை ஐந்து மணிக்கு அந்தர்யோகம் முடிவுறும்.

மே மாதம் 27ஆம் தேதி சனிக்கிழமை காலை பிரார்த்தனை, தியானம் இரண்டும் விவேகானந்தர் சுவாமிகள் சிலை முன்பும், மாலை நிகழ்ச்சிகள் விவேகானந்தர் பாறையில் அமைந்துள்ள மண்டபத்திலும் நடைபெறும்.

அந்தர்யோகக் குழு
கன்னியாகுமரி

## சந்தா விவரம்

**1. டிபாஸிட் சந்தா ரூ. 100**

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்து விட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும் பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**2. ஆண்டு சந்தா ரூ. 10**

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**3. சகாய சந்தா ரூ. 5**

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

14.7

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை



சக்கரம் 27 | காளயுக்தி ௵ சித்திரை ௴ | ஆரம் 4

## பொருளடக்கம்



## அந்தர்யோக விவரங்கள்

மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 16—4—78 ஞாயிற்றுக்கிழமை

இடம்: விவேகானந்த கல்லூரி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

பெங்களூரில் 30—4—78 ஞாயிற்றுக்கிழமை

இடம்: கண்டோன்மெண்ட் அஜந்தா டாக்கீஸ் எதிரிலுள்ள ஒடுக்கத்தூர் [ சுவாமிகள் மடம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

ராமநாதபுரம் ஜில்லா—விருதுநகரில் 30—4—78 ஞாயிற்றுக்கிழமை

இடம்: சிம்னி நந்தவனம்

நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-00 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

திருநெல்வேலி ஜில்லா—கோவில்பட்டியில் 30—4—78 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகேயுள்ள லாயல் மில் ஆரம்பப் பாடசாலை

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

[ பின்பக்கம் பார்க்க ]

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**தர்மபுரி ஜில்லா—காவேரிப்பட்டணத்தில் 1—5—78 திங்கட்கிழமை**

இடம்: தபோவனம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-45 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்
உணவு வசதி: நேரில் உணவு சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**வடஆற்காடு ஜில்லா—ஆம்பூரில் 2—5—78 செவ்வாய்க்கிழமை**

இடம்: காசிச்செட்டிவீதி திருமண மண்டபம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—குடியாத்தத்தில் 3—5—78 புதன்கிழமை**

இடம்: வேதாந்தப் பாடசாலை
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**கோவை ஜில்லா—ஈரோட்டில் 7—5—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: பெரியார் மன்றம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—கம்பத்தில் 7—5—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ முத்தையா பிள்ளை ஞாபகார்த்த உயர்நிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்
உணவு வசதி: நேரில் ரூ. 1-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**மதுரை ஜில்லா—சுருளியில் 14—5—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: சுருளித் தீர்த்தம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—பாளையங்கோட்டையில் 14—5—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: பெருமாள் கிழக்கு ரத வீதியிலுள்ள திரு. M. மனகாவலம் பிள்ளை கல்யாண மண்டபம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்
உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**கோவை ஜில்லா—திருப்பூரில் 14—5—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: கருவம்பாளையம் வேதாந்த ஆசிரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும் தாய்மார்களும் அந்தர் யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 27 | காளயுக்தி ஹூ சித்திரை மீ | ஆரம் 4

## பிரார்த்தனை

अङ्गुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा सदा जनानां हृदये सन्निविष्टः ।

— कठोपनिषत्

அங்குஷ்டமாத்ர: புருஷோऽந்தராத்மா ஸதா
ஜனனும் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட: ।

கட்டைவிரல் மாத்திரமாக ஜனங்களுடைய ஹிருதயத்திலே அந்தராத்மாவாகப் புருஷன் ஸதா வீற்றிருக்கிறான்.

அன்றுநின்றான் கிடந்தானவன் என்று
சென்று நின்றெண்டிசை ஏத்துவர் தேவர்கள்
என்று நின்றேத்துவன் எம்பெருமான்தனை
ஒன்றியென் உள்ளத்தின் உள்ளிருந்தானே.

— திருமந்திரம்

# அருள் விருந்து

துயரத்தைத் துடைக்க வல்லது சத்தியம்.

தூய மனம் படைத்திருக்கிறவன் எதற்கும் அஞ்சுவதில்லை.

பிறர்க்கிடையில் வேற்றுமையை வளர்ப்பவன் சமுதாயத் தொண்டனுகான்.

அறநெறி பிசகாதவனைக் காப்பாற்றுவதற்குச் சூழ்நிலை தானுக வந்தமைகிறது.

தர்மத்தை உறுதியாகக் கடைப்பிடிப்பவன் பெருநெறியினின்று பிசகுவதில்லை.

ஸத்தியத்தினின்றும் சேவையினின்றும் பிசகாதவனே நல்ல வழக்கறிஞனுகின்ருன்.

இக்கணத்தில் நீ இயற்ற வேண்டிய கடமையில் மனது முழுதையும் செலுத்து.

திருப்தியே வடிவெடுத்துள்ள உள்ளத்தை இறைவா எனக்குக் கொடுத்தருள்வாயாக.

பாரமார்த்திக வாழ்வில் ஈடுபடுவதற்கேற்ப ஒரு மனிதன் பரமானந்தத்தை அனுபவிக்கிருன்.

ஏனையவர்கள் ஞானதீபம் ஏற்றுதற்கு உனது ஞானதீபத்தைப் பணிவுடன் கொடுத்து உதவுக.

பிறர்க்கு நலனே செய்வதன் வாயிலாக உன்னுடைய குறைபாடுகளினின்று நீ விடுதலையடைகின்ருய்.

இலட்சியத்தில் கண்ணும் கருத்துமாயிருப்பவன் வெற்றி தோல்வியைப் பொருள்படுத்துவதில்லை.

எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படாது நிகழ்காலத்தில் உன் கடமையை முறையாக நிறைவேற்றுக.

பிறர்க்கு நரகவேதனையை வழங்குவதன் வாயிலாக நமக்கு நாம் சொர்க்கத்தைச் சிருஷ்டிக்க முடியாது.

தத்துவத்தை அறிந்திருக்கிறவன் எத்தனை எத்தனை கர்மங்களில் ஈடுபட்டாலும் அவன் அவைகளில் கட்டுப்பட்டவன் ஆகான்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

பிரம்ம சமாஜத்து அன்பர்களுடன் பரமஹம்சர் தொடர்ந்து உரையாற்றிக்கொண்டிருக்கிறார். அவர் பகர்ந்ததாவது: "உலகப்பற்றுடைய மாந்தர் அப்பற்றுதலிலேயே மேலும் மேலும் அழுந்திக்கொண்டிருக்கின்றனர். அவர்களின் பாங்கை ஒட்டகத்தின் பாங்கோடு ஒப்பிடலாம். வடிவழகற்ற அவ்விலங்கு முட்செடிகளையே தொடர்ந்து தின்கிறது. அதன் உதட்டில் முள் தைத்துக்கொண்டு சில வேளைகளில் ரத்தம் சொட்டும். அப்படி ரத்தம் சொட்டுவதையும் பொருள்படுத்தாது முள் புதர்களையே அது புசித்துக்கொண்டிருக்கும். உலகப்பற்றுடைய மனிதன் சில வேளைகளில் தன் செல்வனை இழக்கின்றான். அவனைக் குறித்து அவன் துயரப்பட்டுக்கொண்டிருக்கிறான். அதற்கிடையில் ஆண்டுக்கொரு மகப்பேறு எடுப்பதை அவன் நிறுத்திவிடுவதில்லை. மகள் ஒருத்தியை மணம் முடித்துக் கொடுப்பதில் தன் சொத்தில் பெரும்பகுதியை அவன் இழந்திருக்கலாம். அப்படியிருந்தும் புதிய பெண்குழந்தைகளைப் பெற்றெடுப்பதை அவன் நிறுத்திவிடுவதில்லை. ஏன் அவன் அப்படி நடந்துகொள்ளுகிறான் என்று கேட்டால் அவன் அதற்கு விடையாக 'நான் என்ன செய்வது? என்னுடைய தலையெழுத்து இப்படி இருக்கிறது!' என்று விடை விடுக்கிறான். ஏதோ சில வேளைகளில் புண்ணியக்ஷேத்திரம் ஒன்றுக்கு ஏதோ ஒரு காரியமாகப் போகிறான். ஆனால் கோவிலுக்குச் சென்று கடவுள் தரிசனம் காண்பதற்கோ அல்லது கடவுளைப்பற்றிச் சிந்திப்பதற்கோ அவனுக்கு நேரம்கிடைப்பதில்லை. மனைவிக்காகவென்று மூட்டை முடிச்சுக்களைத் திணறிக்கொண்டு தூக்கி வருகிறான். ஏதோ ஒரு சமயத்தில் தன் செல்வன் ஒருவனை அவன் கோவிலுக்கு எடுத்துச் செல்லுகிறான். தெய்வத்துக்குஅபிஷேகமான தீர்த்தத்தை வாங்கித் தன் மகன் பருகுவதற்குக் கொடுக்கிறான். மகனைச் சந்நிதியில் படுக்க வைத்து உருளும்படி சொல்லுகிறான். ஆயினும் தான்மட்டும் கடவுள் வழிபாட்டில் எந்த விதத்திலும் ஈடுபடுவதில்லை. இத்தகைய பரிதாபகரமான நிலைக்கு இம்மனிதன் தன்னைத் தானே கொண்டுவந்திருக்கிறான். ஓர் அடிமைபோன்று ஆகாரத்தின் பொருட்டு அவன் மற்றவர்களுக்குப் பணிவிடை பண்ணுகிறான். சாதாரணமாக வாய்க்கிற சம்பளம் அவனுக்குப் போதாது, குறுக்கு வழிகளிலும் அவன் பணம் சம்பாதிக்கின்றான். பொய் சொல்லுதல், லஞ்சம் வாங்குதல், பெரியநிலையிலுள்ளவர்களைக் குறித்து முகஸ்துதி பண்ணுதல் ஆகிய பொருந்தாத நடைமுறைகளைத் தங்குதடையின்றி அவன் கையாளுகிறான். கடவுள் நாட்டம் பூண்டுள்ள பக்தனொருவனைப் பார்த்து அவன் பரிகாசம் பண்ணுகிறான். பக்தனைப் பைத்தியக்காரன் என்று அவன் அலட்சியப்படுத்துகிறான்.

உலகின் போக்கு இப்படியெல்லாம் இருக்கிறது. என்னென்ன பாங்குடைய மக்கள் உலகிலிருக்கிறார்கள் என்று எண்ணிப்பாருங்கள். மக்கள் எல்லாரும் ஒரே தரப்பட்டவர்களாக அமைக்கப்பட்டு இருக்கிறார்கள் என்று உங்களில் ஒருவர் பகர்ந்தீர். ஆனால் உண்மை யாது என்பதை எண்ணிப் பாருங்கள். எத்தனை யெத்தனை விதமான மக்களை இவ்வுலகில் நாம் காண்கிறோம்! அவர்களில் சிலர்க்கு ஆற்றல் அதிகம். வேறு சிலர்க்கு ஆற்றல் குறைந்திருக்கிறது. இந்த வேறுபாட்டையும் நாம் காண்கிறோம்.

மக்கள் பொதுவாக இவ்வுலக விஷயங்களிலேயே கட்டுண்டவர்களாக இருக்கிறார்கள். மரணம் வருகின்றபொழுதும் அவர்கள் இவ்வுலக விஷயங்களைப்பற்றியே பேசிக்கொண்டிருக்கிறார்கள். இறைவனுடைய நாமத்தைப் பெயரளவில் அவர்களுடைய நாவு உச்சரித்துக்கொண்டிருக்கிறது. உலகப் பழக்க வழக்கங்களை முன்னிட்டு அவர்கள் கங்கா ஸ்நானம் பண்ணுகின்றனர். புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் போகின்றனர். இப்புண்ணியக் கிருத்தியங்களால் அவர்களுக்கு ஆவதுதான் என்ன? உள்ளூர அவர்களுடைய உள்ளத்தில்

உலகப்பற்று உறுதியாகப் பிடித்துக்கொண்டிருக்கிறது. மரணதசையில் அப்பற்றுதலானது தன்னைத் தானே விளக்கிக்கொள்ளுகிறது. சாகின்றபொழுது பொருளற்ற புன்மொழிகளை அவர்கள் உளறுகின்றனர். 'தண்ணீர் கொண்டுவாருங்கள்.' 'அவனைக் கூப்பிடுங்கள்.' 'இவனைப் போகச் சொல்லுங்கள்.' இப்படியெல்லாம் பொருளற்ற பதங்களை மதிமயக்கத்திலிருந்துகொண்டு அவர்கள் உரக்கக் கூவுகின்றனர். கிளிப்பிள்ளைக்குப் பேசக் கற்றுக் கொடுத்திருக்கிறோம். அமைதியான நிலையிலிருந்துகொண்டு அது சிவா,நாராயணா என்று எல்லாம் அற்புதமாகப் பேசுகிறது. ஆனால் பூனையொன்று அதை எதிர்த்துத் தாக்குகிறபொழுது அது 'கர் கர்' என்று கத்துகிறது. பகவத்கீதையில் கோட்பாடு ஒன்று பகரப்பட்டிருக்கிறது. உடலை உகுக்கின்ற வேளையில் மானுடனொருவன் எத்தகைய எண்ணத்தை எண்ணுகின்றானே அத்தகைய எண்ணத்துக்கேற்ப அவனுக்கு அடுத்த பிறவி வாய்க்கிறது. பரத சக்கரவர்த்தி 'மான் மான்' என்று இயம்பிக் கொண்டு உடலை விட்டு வெளியேகினன். அதன் விளைவாக அடுத்த பிறவியில் அவன் மானாகப் பிறந்தான். ஆனால் மானுடனொருவன் பகவானைப் பற்றிச் சிந்தனைபண்ணிக்கொண்டு தேகத்தைத் துடைத்துத் தள்ளுவானாகில் அவன் பகவானை அடைகின்றான். மேனி தாங்கி அவன் மீண்டும் இம் மண்ணுலகில் பிறப்பெடுக்க வேண்டிய அவசியமில்லை."

பிரம்ம பக்தர் ஒருவர்: "ஐயனே, மானுடனொருவன் மற்ற நேரங்களில் கடவுளைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்கிறான். ஆனால் சாகுந்தறுவாயில் அவன் கடவுளை மறந்துவிடுகிறான். அதன் விளைவாகத் துன்பமும் துயரமும் நிறைந்த இம்மண்ணுலகில் அவன் மீண்டும் பிறப்பெடுக்க வேண்டுமா? அப்படிப் பிறப்பெடுப்பதற்கு அவசியம் யாது உளது? தன்னுடைய ஆயுள்காலத்தில் அவன் கடவுளைப் பற்றித்தானே எண்ணிக்கொண்டிருந்தான்."

பரமஹம்சர்: "மானுடனொருவன் கடவுளைப் பற்றி நினைக்கிறான் என்பதில் ஐயமில்லை. ஆனால் கடவுள் விசுவாசம் அவன் உள்ளத்தில் உருவெடுக்கவில்லை. திரும்பத் திரும்ப அவன் தெய்வத்தை மறந்துவிடுகிறான். உலகப்பற்றையே அவன் பெருமிதமாக வளர்த்து வருகிறான். யானை ஒன்றை நாம் குளிப்பாட்டுகிறோம். அதன் பிறகு அந்த விலங்கு மண்ணைவாரித் தன் உடல் முழுவதிலும் தூவிக்கொள்ளுகிறது. அதற்கு நிகரானது உலகப்பற்று உடையவனுடைய போக்கு. 'மனிதனுடைய மனது மதம் பிடித்த யானைக்கு ஒப்பானது.' ஆனால் யானை ஒன்றைக் குளிப்பாட்டிய பிறகு அதற்குரிய மேடையில் அதைக் கொண்டுபோய்க் கட்டி வைத்துவிட்டால் அது தன் உடலை அழுக்குப்படுத்த முடியாது; சுத்தமாகவே இருக்கும். அதுபோன்று மானுடனொருவன் கடவுளைப்பற்றி ஆழ்ந்து எண்ணியான பிறகு காமத்தைப் பற்றியோ காசு ஆசையைப் பற்றியோ எண்ணுதது இருப்பானாகில் அவனுடைய மனது தூய நிலையில் நிலைத்திருக்கிறது. அத்தகையவன் மறுபிறப்பெடுக்காத பெருநிலையை அடைவது சாத்தியம்.

"மனிதனிடத்துக் கடவுள் விசுவாசம் உருவெடுக்கவில்லை. ஆகையினால்தான் அவன் படாதபாடு படுகிறான். மக்களுக்கிடையில் கங்கா ஸ்நானத்தைப் பற்றிய கொள்கையொன்று உண்டு. கங்கைக்குள்ளே மானுடனொருவன் மூழ்கி நீராடுகின்ற பொழுது அவனுடைய பாபங்களெல்லாம் கரையிலுள்ள ஒரு மரத்தின் மீது ஏறி அமர்ந்துகொள்ளுகின்றன. கங்கா ஸ்நானத்தை முடித்துக் கொண்டு மனிதன் கரைக்கு வருகின்ற பொழுது பழைய பாபங்கள் மரத்தினின்று குதித்து அவனுடைய தோளின்மீது ஏறிக்கொள்ளுகின்றன. (இதைக் கேட்டு எல்லாரும் நகைக்கின்றனர்.) மானுடனொருவன் உலகில் வாழ்ந்துகொண்டிருக்கும் பொழுதே தன்னுடைய மனதை அவன் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும். இங்ஙனம் தன்னைப் பக்குவப் படுத்திக் கொண்ட மனிதன் மரணதசையிலும் கடவுளைப் பற்றியே நினைக்கிறான். இதற்கு இடையறாத சாதனம் முற்றிலும் அவசியமானது. பகவத்தியானத்தில் ஆழ்ந்து மூழ்கிப் பழகியிருப்பவனுக்குச் சாகும் நேரம் வருகிற பொழுதும் கடவுள்சிந்தனையிலேயே அவன் நிலைத்திருப்பான்."

பிரம்மபக்தன்: "ஐயனே, அரிய விஷயங்களைத் தாங்கள் அற்புதமாக எடுத்து இயம்பி

யிருக்கிறீர்கள். இத்தகைய மொழியமுதத்தைக் கேட்க வாய்ப்புப் பெற்றிருக்கின்ற நாங்கள் பாக்கியவான்களாகின்றோம்.''

பரமஹம்சதேவர்: ''ஆ! அதொன்றுமில்லை. இவை யாவும் வெறும் சாதாரணமான பேச்சுக்களேயாம். ஆனால் என் உள்ளத்தினுள்ளே உதித்துக் கொண்டிருக்கிற உணர்வு யாது என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்களாக! நான் வெறும் யந்த்ரம். அந்த யந்த்ரத்தை இயக்குகின்ற யந்த்ரியாக இறைவன் இருக்கிறார். நான் வெறும் இல்லம். அந்த இல்லத்தில் வசித்து வருகிற இல்லத்தானாக இறைவன் இருக்கிறார். இயங்குகின்ற எந்திரமாக நான் இருக்கிறேன். அதை இயக்குபவனாக இறைவன் இருக்கிறார். ஒரு ரதமாக நான் இருக்கிறேன். அந்த ரதத்தில் ஊர்ந்து செல்பவனாக இறைவன் இருக்கிறார். அவர் ஆட்டிவைத்த பிரகாரம் நான் ஆடுகிறேன். அவர் என்னைப் பயன்படுத்துவதற்கேற்ப நான் அவருக்குப் பயன்பட்டு வருகிறேன்.''

சிறிது நேரத்துக்குப் பிறகு திரைலோக்கியர் சங்கீர்த்தனங்கள் பாட ஆரம்பித்தார். தம்புரா மிருதங்கம் தாளம் போன்ற பக்க வாத்தியங்களும் முறையாக அமைந்திருந்தன. திரைலோக்கியருடைய சங்கீர்த்தனத்தை அனுசரித்துப் பரமஹம்சதேவர் ஆனந்தமாக நர்த்தனம் புரிந்தார். ஆழ்ந்த பக்தியிலே மூழ்கியவராக அவர் இருந்தார். இடையிடையே சமாதி நிலையையும் அவர் எட்டுவாராயினர். சமாதி நிலையில் அவர் ஸ்தம்பித்து நின்றார். அவருடைய கண்கள் அசைவற்று நின்றன. அவருடைய முகவிலாசத்தில் அருள் ஒளி மிளிர்ந்து கொண்டிருந்தது. அவருடைய அருளன்புக்குரிய சிஷ்யர் ஒருவருடைய தோளின்மீது ஒரு கையை நாட்டியவராக அவர் காட்சி கொடுத்தார். அத்தகைய சமாதி நிலை கலைந்து மீண்டும் அவருடைய மனது உலக உணர்வுக்குக் கீழிறங்கி வந்தது. அப்பொழுது மீண்டும் ஒரு முறை மதம் பிடித்த யானை போன்று அவர் தாண்டவம் புரிந்தார். தமது தாண்டவத்திற்கு ஒத்த பாடலொன்றை அவர் தாமாகவே அமைத்துப் பாடுவாராயினர்.

'தாயே, நீ தாண்டவமாடு. உன்னுடைய பக்தர்களுக்கிடையில் நீ தாண்டவமாடு. நீ தாண்டவமாடுகையில் உன்னுடைய பக்தர்களையும் ஆனந்தத் தாண்டவம் ஆடும்படி தூண்டுவாயாக. தாயே, என்னுடைய ஹ்ருதய கமலத்தில் நீ ஆனந்தத் தாண்டவம் ஆடுவாயாக! தாயே, நீயும் பரப்பிரம்மமும் ஒன்றே. பரப்பிரம்ம உணர்வை ஓங்குவிக்கும் உள்எழுச்சியுடன் நீ நர்த்தனம் புரிவாயாக. உலகம் யாவையும் உன்மயமாக மாற்றியமைக்கும் பேரழகு படைத்திருக்கிற நீ பரமானந்தத் திருநடனம் ஆடுவாயாக.'

இது கண்கொள்ளாத காட்சி. இதை விளக்குவது எளிதன்று. இதைப் பார்த்தவர்கள் யாருமே இதை மறக்கவும் முடியாது. சரீரம் வளர்ந்து பெரிய வண்ணம் எடுத்திருப்பதற்கிடையில் மன அமைப்பில் ஒரு பாலகனுடைய பாங்கு தென்படுகிறது. தெய்விகம் அதில் தாண்டவமாடுகிறது. மகிமைகளனைத்தும் அதில் மிளிர்கின்றன. கடவுள் பக்தியில் உச்சநிலையடைந்து பரவசப்பட்டிருக்கும் பக்தனொருவனுடைய பாங்கு எத்தகையது என்பதை இக்காட்சி தெற்றென விளக்குகிறது. பக்தனொருவனுடைய மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களில் மிளிர்வது பரவஸ்துவே என்னும் கோட்பாடும் வெளியாகிறது. காந்தத்தின்கண் இரும்புத்தூள்கள் கவர்ந்திழுக்கப்படுவன போன்று பிரம்ம சமாஜத்துப் பக்தர்கள் பரமஹம்சதேவரைச் சுற்றிச் சுற்றி ஆடினர். மெய்ம்மறந்து அவர்கள் பரப்பிரம்மத்தையும், அன்னை பராசக்தியையும் ஆனந்தமாகப் போற்றினர். அந்நாமங்களை ஆர்வத்துடன் உச்சரித்தனர். அம்மையே அப்பா என்று அவர்கள் ஆர்வம் ததும்ப உரைத்தனர்.

சங்கீர்த்தனமும் ஆனந்தத் தாண்டவமும் முடிவுக்கு வந்தன. பக்தர்கள் கீழே அமர்ந்தனர். அப்பொழுது இரவு மணி எட்டு ஆயிற்று. வழக்கமாக நிகழுதற்கிருந்த பிரம்ம சமாஜ ஆராதனையைப் பற்றி எல்லாரும் மறந்து விட்டனர். குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட வழிபாடு என்னும் கோட்பாட்டைப் பற்றிய எண்ணம் அப்போது யாருக்குமே எழவில்லை.

---

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

347. புந்தியினுல் நின்னடியைப்
போற்றுகின்ற மெய்யடியார்
சிந்தை யிறப்போநின்
தியானம் பராபரமே.

புந்தி—நல்லறிவு; சிந்தை—மனம்.

பொருள்களைப் பாகுபடுத்தும் பான்மை அறிவு எனப்படுகிறது. இந்த அறிவானது நல்லறிவாயிருப்பதும், புல்லறிவாயிருப்பதும் சாத்தியம். அதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். பாண்டவர்களுள் மூத்தவனுகிய யுதிஷ்டிரனும், கௌரவர்களுள் மூத்தவனுகிய துரியோதனனும் துரோணுச்சாரியாரிடமிருந்து கல்வி பயின்று தங்கள் அறிவைத் தீட்டினர். ஆனல் அவர்களின் அறிவு இரண்டு பாங்குகளில் போய் முடிந்தன. இவ்வுலகை ஆராய்ந்த யுதிஷ்டிரன் இதில் கெட்டவர்களைக் காணவே யில்லை. மற்று இதே உலகை ஆராய்ந்த துரியோதனன் இதில் நல்லவர்களைக் காணவே யில்லை. அறிவு சொரூபமாயுள்ள மனிதன் நல்லறிவை வளர்க்கவேண்டும். நல்லறிவு ஓங்குதற்கேற்ப மானுட வாழ்க்கையின் பயன் பரமனைப் போற்றுதல் என்பது புலனுகிறது. பின்பு பரமனை வழுத்துதற்கேற்ப மானுட அறிவு மேலும் மேலும் தெளிவடைந்து வருகிறது. தெளிவடைந்து வருகிற அறிவு புறப்பொருள்களையெல்லாம் பரம்பொருளின் தோற்றங்கள் எனப் பொருள்படுத்துகிறது. அத்தகைய தூய நிலையை அடைந்து வருகிற சிந்தை தியானத்துக்குத் தகுதியுடையதாகிறது. தியானம் பயிலுகிறவனுக்குப் பலப்பல பொருள்களாகத் தென்படும் தெய்வம் ஒன்றே என்பது விளங்குகிறது. அந்த ஒரு பொருளில் அறிவு ஊன்றியிருக்கிறபொழுது அது தியானமாகிறது. முதிர்ந்த தியானம் சமாதியில் பூர்த்தியாகிறது. இதினின்று ஆத்ம சாதன சம்பந்தமான கோட்பாடு ஒன்று வெளியாகிறது. பிரபஞ்சத்திலுள்ள பலப்பல பொருள்களை ஓர வல்லது அறிவு. நல்லறிவானது அப்பொருள்களினிடத்து நலனையே காண்கிறது. மலினப்பட்ட அறிவோ அப்பொருள்களினிடத்துப் பொல்லாங்கையே பார்க்கிறது. நலனைக் காணும் அறிவு தெய்வ வழிபாட்டுக்குத் தகுதி உடையதாகிறது. புலப்படுகின்ற பலப்பல பொருள்களையும் உயிர்வகைகளையும் தெய்விகம் வாய்ந்தவைகளாகவே நல்லறிவு காண்கிறது. அத்தகைய காட்சி கடவுள் வழிபாட்டுக்கு நிகராகிறது. பின்பு நாம ரூபங்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு வஸ்துவில் லயித்திருப்பது நல்ல தியானமாகிறது. தியானுவஸ்தையில் அறிவானது தூய அறிவாகத் திருந்தியமைகிறது. தூய அறிவு சத்துவகுணத்தில் நிலைத்திருக்கிறது. சத்துவகுணத்தின் நிறம் வெண்மை. நீராவி வெள்ளை வெளேறெனக் காட்சியளிக்கிறது. பிறகு அது நிறமற்றதாகிறது. அதேபாங்கில் சத்துவகுணம் குணதீதத்தில் அல்லது குணமற்ற பெருநிலையில் ஒடுங்குகிறது. சத்துவகுணத்தில் நிலைத்துள்ள அறிவும், பரத்தில் ஒடுங்க வல்லதாகிறது. நல்லறிவைப் பரத்தினில் கரைத்துவிடுவது ஆத்ம சாதனத்தின் குறிக்கோள். இக்கோட்பாட்டை மற்ருேர் இடத்தில் 'அந்தக்கரணம் அடங்கத் துறப்பதுவே எந்தத்துறவினும் நன்று எந்தாய் பராபரமே' என அண்ணல் இயம்புகிருர். அந்தக்கரணம், உள்ளம், அறிவு, சிந்தை, புந்தி ஆகிய இச்சொற்கள் யாவும் அகக்கரணத்தையே குறிக்கின்றன. அது பரத்தில் லயமாகிற பொழுது ஆத்ம சாதகன் கைவல்ய முக்தியடைகிருன் என்னும் கோட்பாடு இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

348. உனக்குவமை யாக்கருணை
உள்ளவரும் வன்மைக்
கெனக்குவமை யானவரும்
இல்லை பராபரமே.

ஜீவாத்மனுக்கும், பரமாத்மனுக்கும் உள்ள வேறுபாடு இக்கண்ணியில் நன்கு வெளியாகிறது. உயிர்களனைத்தையும் தன்மயமாக்குதலில் கண்ணும் கருத்துமாகக் கடவுள் இருக்கிருர். ஆதலால் அவர் கருணைகரன் எனப்படுகிருர். கருணையின் முதிர்ச்சியால் அவர் பித்துப் பிடித்தவர் போன்று காட்சிகொடுக்கிருர். பித்தன் என்னும் பெயர் அதை முன்னிட்டே

அவருக்கு வந்துள்ளது. உலகனைத்தையும் உய்விக்க உலகத்தவர் கிளப்பிய விஷத்தை அவர் ஏற்றுக் கொண்டார். அவருடைய கருணைக்கு அது சிறந்ததொரு சான்றாகிறது. ஜீவாத்மனுடைய பாங்கோ இதற்கு நேர்மாறானது. சுயநலமே வடிவெடுத்தவன் ஜீவாத்மன். மற்ற உயிர்களின் நலனைக் கருத்தில் வாங்கிக் கொள்ளாது தன் சொந்த நலனிலேயே யாண்டும் ஊறியிருப்பவன் வன்னெஞ்சம் படைத்தவனாகிறான். வன்னெஞ்சத்தை வளர்க்க வளர்க்கப் பிறவிப் பிணியும் பெருகிக் கொண்டே போகிறது. பிறரைத் துன்புறுத்தித் தன் சொந்தக் காரியத்தை நிறைவேற்றுகிற ஜீவாத்மன் அரக்கன் எனப்படுகிறான். அதாவது சுயநலத்தின் உச்சநிலையிலிருப்பவன் அ ர க் க ன். அதற்கேற்றவாறு அவன் படைத்துள்ள பிரபஞ்சப் பற்றும் உறுதி பெற்று வருகிறது. மானுடனொருவன் எவ்வளவுக்கெவ்வளவு சுயநலத்தை ஒதுக்குகிறானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் ஆத்ம பரிபாகம் அடைகிறான். சுயநலத்தை வளர்ப்பது பிரவிருத்தி. சுயநலத்தை ஒதுக்கித்தள்ளுவது நிவிருத்தி. மன்னுயிர்களையெல்லாம் தன்னுயிர்போன்று கருதி அவைகளுக்குத் தியாக புத்தியுடன் பணிவிடை பண்ணுகின்றபொழுதே நிவிருத்தி பூர்த்தியாகிறது. தங்குதடையின்றி ஜீவாத்மன் ஒருவன் தன்னை உலக நலனுக்காக ஒப்படைத்துப் பழகுவானாகில் அவன் தெய்வத்துக்கு உரியவனாகிறான். அன்னவன் மீது கருணை கூர்ந்து கருணாகரக்கடவுள் அவனைத் தன்மயமாக்குகிறான் என்பது இக்கண்ணியின் கருத்து.

349. தாயிருந்தும் பிள்ளை
தளர்ந்தாற்போல் எவ்விடத்தும்
நீயிருந்தும் நான்தளர்ந்து
நின்றேன் பராபரமே.

தாயில்லாப்பிள்ளையின் பாங்கை ஓரளவு நாம் அறிந்துகொள்ள முடியும். ஏனைய வாய்ப்புக்கள் யாவையும் நிறைநிலையில்பெற்றிருப்பதற்கிடையில் தாயோடு இணங்கியிருப்பதை அடையப்பெறாத குழந்தை யொன்றுக்கு அவையாவும் பொருளற்றவைகளாம். நிலத்தின் மீது எடுத்துப் போடப்பட்ட மீன் ஒன்றுக்கு நீர் ஒன்றே தேவையாயிருக்கிறது. மற்ற சூழ்நிலைகள் எவ்வளவு வசதி வாய்க்கப் பெற்றவைகளாயிருந்தும் அவையாவும் பயன் படமாட்டா. தாயில்லாக் குழந்தையின் பரிதாப கரமானநிலையும் அத்தகையது. ஆயுள் காலம் முழுவதற்கும் தாயில்லாக் குழந்தையின் வாழ்வு அரைகுறையானதாம். பண்பிலும் அது மேல்நிலைக்கு வருவதில்லை.

ஆத்மசாதகனொருவனுக்கு அருள்தாகம் உருவெடுக்கும்பொழுது அவனுடைய மனநிலையும் கிட்டத்தட்ட தாயில்லாக் குழந்தையின் மனநிலைக்கு ஒப்பானதாகிறது. ஆனால் அத்தகைய அனுதாபத்துக்குரிய மனநிலையை அவன் அறியாமையினால் வரவழைத்துக் கொண்டான். நாம் சுவாசிக்கும் காற்று உலகெலாம் வியாபித்திருப்பது போன்றும், அதற்கு மேலும் ஆண்டவனுடைய அருள் எங்கும் வியாபித்திருக்கிறது. காலத்தால் அது தடைப்படுவதில்லை. நாடுபவர்களுக்கெல்லாம் அது சொந்தமானது. அப்படியிருந்தும் அதைப் பயன்படுத்தத் தெரிந்துகொள்ளாதவர்களின் நிலைதான் பரிதாபகரமானது. ஓர் அறையினுள் இருக்கும் நச்சுக் காற்றை ஜன்னலின் வாயிலாக வெளிப்படுத்துதற்கேற்பத் தூய காற்று அவ்வறையினுள் நுழைகிறது. ஆத்மசாதகனுடைய நெஞ்சம் வீட்டிலுள்ள ஓர் அறைக்கு ஒப்பானது. நெஞ்சத்தினுள்ளே நஞ்சுக்கு நிகரான பொருந்தாத எண்ணங்களையும் ஆசாபாசங்களையும் மானுடன் நிறைத்து வைத்திருக்கிறான். அவைகளிடத்தில் பற்று வைத்திருப்பதற்கிடையில் பற்றற்றவன் போன்று பாசாங்கு செய்யவும் கதறிப்பதறி அழவும் அவன் செய்கின்றான். புல்லிய பிரபஞ்ச ஆசைகளையும், பொருளற்ற கொள்கைகளையும் உதறித்தள்ளிவிட்டுப் பரமனுடைய அருளை நாடி வேண்டுவானாகில் அக்கணமே அவன் அதற்கு உரியவனாகிறான்.

ராமன் உள்ள இடத்தில் காமன் இல்லை; காமன் உள்ள இடத்தில் ராமன் இல்லை என்பது கோட்பாடு. உலக ஆசைகளே காமன் எனப் பெயர் பெறுகின்றன. அவைகளை ஒதுக்கித்தள்ளுகிறவனுக்குஇறைவனுடைய அருள்யாண்டும் சொந்தமாகிறது. இக்கோட்பாட்டை அறிந்து சாதனத்தை முறையாக அனுஷ்டிக்கின்றவர்களுக்கு இறைவனுடைய அருள் யாண்டும் சொந்தம் என்பதுஇக்கண்ணியின்கருத்தாகும்.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

கட்டுப்பாடான வாழ்க்கையில் உறுதியாக இரு. புலனடக்கம் இன்றியமையாதது. புற உலகப் பொருள்களிடத்து மனதைப் பறி கொடுக்காதே. புறவுலகப் பொருள்களிடத்து ஆசை கொள்ளாதே. தன்னடக்கம் பயில வேண்டும். உன் புலன்களை மயக்கக் கூடிய உலக விஷயங்கள் இருக்கின்றன. அவைகள் உன்னை நாடி வந்தாலும் நீ அவற்றை நாடிப் போகாதே. அவைகளினிடத்து மனம் செல் லாது இருக்கவேண்டுமென்று இறைவனைப் பிரார்த்தித்துக்கொள். அவைகளின்பால் எவ் விதப் பற்றுதலும் வைக்காதே. அவைகளை மனம் பற்றுகின்ற அளவு நீ சாதனையில் முன் னேற்றம் அடைய முடியாது. அவைகளைக் கையாளுதற்கிடையில் அவைகளை மனம் பற்ற திருந்து பழகவேண்டும்.

துறவு வாழ்க்கை புனித வாழ்க்கை ஆகும். துறவு வாழ்க்கையைப் பற்றிஇருப்பவர்கள் உள்ளம் உலகப் பொருள்களில் இருந்து விலகி இருக்கவேண்டும். உள்ளத்தை உல கப் பொருள்களிலிருந்து விலக்கி எடுத்துத் துறவு வாழ்க்கையை மேற்கொள். பிறரிடம் அன்போடு பழகு. ஆதிக்க மனப்பான்மை கூடாது. ஆதரிக்கின்ற மனப்பான்மையை நீ வளர்த்து வா. எக்கருமத்தைச் செய்தாலும் அது ஈசனுடைய கருமம் என்பதை அறிந்து கொள். நீ ஈசனுக்காகப் பணி புரிந்து வரு கிறாய் என்பதை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள். இங்குள்ள யாவும் ஈசனுக்கு உரியவை என்பதை அறிந்துகொள். ஆணவ அகங்காரத்தால் மனிதன் செயலுக்குக் கர்த் தாவாகத் தன்னை எண்ணிக்கொள்ளுகின்றான்.

பாவங்களுள் பொய்பேசுவது பெரும் பாவ மாகும். குடிகாரனையும், விபச்சாரத்தனம் உடையவனையும் கூட நம்பலாம். ஆனால் பொய் பேசுபவனை ஒரு நாளும் நம்பமுடியாது. பொய் பேசுவது மிகக்கொடியதாகும்.

பிறரிடம் குறை காணவோ, பிறரைப் பற்றிக் குறைவாகப் பேசவோ கூடாது. பிறரிடம் குறைகாண்பாயானால் அது உனக்கே கெடுதி உண்டுபண்ணும். பிறரிடம் உள்ள குறையைப் பற்றியே நீ நினைத்துக்கொண்டிருப்பாயானால் அக்குறை உன் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்து விடும். உன்னிடத்திலுள்ள நலன் மறைந்து பட்டுப்போகும்.

கடவுளோடு இணங்கி இரு. அவருடைய மகிமையை ஆனந்தமாகப் பாடு. இத்தகைய ஆனந்தத்தில் இருப்பதை விட்டு விட்டுப் பிற ரிடம் குறைகாண்கின்ற புல்லிய இயல்பை ஏன் வளர்க்கவேண்டும்? யாவரிடமும் குற்றமற்ற உள்ளத்துடன் தாராளமாகப் பழகு. மகிழ்ச்சி யோடு மற்றவர்களுடன் இணக்கம் வைத்துக் கொள். வீண்பேச்சுப் பேசிக் காலத்தைப் போக்கவேண்டாம். பேச்சைக் குறைப்பது நல்லது. பிறருக்கு நலம்தரும் சொற்களை இனிமையுடன் அளந்தெடுத்துப் பேசிப் பழகு. பிறருடைய குறைகளைப் பேசும்பொழுது உன்னை நீ கெடுத்துக்கொள்கின்றாய். பிற ரிடத்தில் உள்ள நலனைக்கண்டு பழகுகின்ற அளவில் நீயும் நலனடைகின்றாய்,மற்றவர்களும் நலனடைகின்றார்கள். யாவருக்கும் நலம் தரும் சொல்லைச் சிந்தனை செய்து பேசிப் பழகு. உன்னைத் தூய்மையாக வைத்துக்கொள்வதில் கவனமாக இரு. உன்னுடைய இலட்சியத்தை யாண்டும் பின்பற்றி வா. மற்றவர்களிடம் மரியாதையாக நடந்துகொண்டு நீ மற்றவர் களிடம் மரியாதையைப் பெறு. பிறரிடம் நலத்தைக் கண்டு அந்நலத்தை அவர்களிடம் வளர்ப்பாயானால் உன்னிடம் நலம் தானாக வளர்கிறது.

பிறருக்கு நலம் செய்வதில் பேருக்கம் படைத் தவனாக இருப்பாயானால் உன் உள்ளம் கனிந்த உள்ளமாக மாறுகிறது. ''எவ்வுயிரும் என் னுயிர்போல் எண்ணி இரங்கவும் நின் தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே'' என்பது தாயுமானவர் வாக்கு. ''உயிர்களிடத்து இரக் கம் வேண்டும்'' என்று பாரதியாரும் பாடியுள் ளார். எல்லா உயிர்களிடத்தும் அன்பும்இரக்க மும் கொண்ட பேருள்ளம் உன்னுடைய உள்ள மாக இருக்கட்டும். உயிர்களைப் போற்றி அவை களைக் கண்ணியமாக நடத்துவாயானால் நீ அனைவராலும் கண்ணியமாக நடத்தப்படுவாய்.

யாரையும் புறக்கணிக்காதே. பிறரிடம் குறை காண்பது மக்களுடைய இயல்பு ஆகும். ஆனல் நீ பிறரிடம் அன்பு காட்டிப் பழகு. எல்லாரையும் உன்னுடையவர்களாகக் கருது. பிறரிடம் உள்ள குற்றத்தைக் களைவதில் நீயும் உதவு. 'நலம், கேடு' இரண்டும் கலந்து மனிதனிடத்தில் அமைந்திருக்கின்றன. பிறரிடத்தில் உள்ள கேட்டைக் காண்பது யாவர்க்கும் எளிது; ஆனல் சான்ருேர்கள் பிறரிடமுள்ள கேட்டைக் காண்பதில்லை. பிறரிடமுள்ள நலத்தைக் கண்டு பிறரை மேலோராக்குவதில் சான்ருேர்கள் கண்ணும் கருத்துமாக இருக்கின்றனர்.

நீ தெய்வீகம் பொருந்தியவன் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள். சாந்தமாகவும், பெருந்தன்மையாகவும், கண்ணியமாகவும் அன்பாகவும் நடந்துகொள். இனிய, இதமான சொற்களைப் பேசிப் பழகு. நலமும் தூய்மையும் உன்னுடைய சொல்லிலும் செயலிலும் திகழட்டும். உன்னுடைய நடத்தையும் செயலும், நலத்தையும் தூய்மையையும் வளர்ப்பனவாக அமையட்டும். நல்லதையே எண்ணி நல்லதையே பேசி, நல்லதையே செய்து வா. உன்னுடைய திரிகரணங்களும் நலமுடையனவாகுக. நீ உன்னிடத்தில் நலத்தையும் சாந்தத்தையும் வளர்ப்பாயானல் உன்னேடு தொடர்பு வைப்பவர்கள் நலத்தையும், சாந்தத்தையும் பெறுவார்கள். உன்னிடத்தில் மறைந்து கிடக்கும் தெய்வத் தன்மையை நீ விழிப்படையச் செய்வாயானல் உன்னேடு தொடர்பு வைப்பவர்களுடைய உள்ளங்களில் மறைந்து கிடக்கும் தெய்வத் தன்மையை உன்னை அறியாது நீ விழிப்படையத் தூண்டுகின்ருய். தன்னிடத்தில் நலத்தை வளர்ப்பவன் பிறரிடத்திலும் நலத்தை வளர்ப்பவனுகின்ருன்.

பிரமச்சரியம் கடைப்பிடிப்பது அவசியமாகிறது. சத்தியத்தைத் தீவிரமாகக் கடைப்பிடி. தன்னடக்கம் உடையவனுக இரு. நாவடக்கம் பழகு. யாரையும் பகைக்காதே. யாரையும் வெறுக்காதே. பொருமையை அகற்றிவிடு. இத்தகைய தூய பண்புகளை உன்னிடத்தில் வளர்த்து வா. நீ பன்னிரண்டாண்டுகள் பிரமச்சரியம் கடைப்பிடிப்பாயானல் உன்னிடத்து அபூர்வ சக்தி உண்டாகிறது. பிரமச்சரியத்தை முறையாகக் கடைப்பிடித்து வா. அதனல் நீ பெரும்பயன் அடைவாய்.

புனித ஸ்தலங்களுக்குச் சந்தர்ப்பம் வாய்க்கும் பொழுது யாத்திரை சென்று அந்த ஸ்தலங்களில் சில நாட்கள் வசித்திரு. புனித சூழ்நிலையும் இடமாற்றமும் உன்னுடைய உள்ளத்தையும், சரீரத்தையும் புதுப்பிக்கும். புனித ஸ்தலங்கள் தியானம் செய்வதற்கு அனுகூலமாக இருக்கும். புனித ஸ்தலங்களில் ஆன்ருேர்கள் எண்ணிய தூய எண்ணங்கள் இருக்கின்றன. நீ தியானத்தில் அமரும் பொழுது அவ்வெண்ணங்கள் உன் உள்ளத்தில் தூய எண்ணங்களை எழுப்புகின்றன.

மனத்தைத் தூய்மையாக வைத்திரு. உலகம் குறைபாடுடையது. நீ ஆன்மீக முன்னேற்றம் அடைய விரும்பினல் தீவிரமாகப் போராடத் தயாராக இருக்கவேண்டும். உன் உள்ளத்தில் எழும் ஆசைகளை உன்னிப்பாகக் கவனித்து வரவேண்டும். பொருந்தாத ஆசைகள் எழும் பொழுது அவைகளை அடக்கவேண்டும். எண்ணியதை எண்ணியாங்கு நிறைவேற்றும் இச்சாசக்தியை வளர்த்து வா. அப்பொழுது தான் பொருந்தாத ஆசைகளை அடக்கும் திறன் உனக்கு உண்டாகிறது. திண்ணிய உள்ளமும் பொருந்தாத ஆசைகளை அடக்கும் திறனும் உனக்கு வந்துவிடுமானல் ஆத்மீகத்துறையில் முன்னேறுவது உனக்கு மிகவும் எளிது.

ஏகாதசி, சிவராத்திரி, அமாவாசை போன்ற நாட்களில் உபவாசமிருப்பது மிகவும் நல்லது. உபவாச நாட்களில் உள்ளத்தை இறைவனிடம் திருப்பும் சத்விஷயங்களில் ஈடுபடுத்தி உணவைப் பற்றி மறந்திருந்து பழகவேண்டும். உபவாச நாட்களில் நீ உணவைப் பற்றி மறந்திருந்து பழகுகின்றவளவு உன்னிடத்தில் இச்சாசக்தி வளருகிறது. உலக விஷயங்களிடத்து உள்ளம் வைத்திருக்கும் காம உணர்ச்சியின் வேகத்தை அடக்கவேண்டும். உலக விஷயங்களைப் பற்றிய எண்ணம் மனதில் எழுங்கால் அதில் மனம் இன்ப உணர்ச்சி கொள்ளாதிருந்து பழக வேண்டும். அப்பொழுதுதான் உலக விஷயங்களில் மனதுக்குள்ள காம உணர்வின் வேகம் தணியும். உள்ளத்தில் கடவுளிடத்துக் காமம் அதிகரிக்கவேண்டும்.

# தெய்வாம்சம் பொருந்திய கிறிஸ்து

(சுவாமி விவேகானந்தர் 1900ஆம் ஆண்டில் கலிபோர்னியாவிலுள்ள லாஸ்ஏஞ்சலஸ் என்னுமிடத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[92ஆம் பக்கத் தொடர்ச்சி]

செல்வந்தர் ஒருவர் இயேசுநாதரிடம் வந்து "அருள்தலைவரே, அமரவாழ்வு பெறுதற்கு நான் என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டார். இயேசுநாதர் அவரிடம் பகர்ந்ததாவது: "ஒரு குறைபாடு உன்னிடத்தில் இருக்கிறது. வந்த வழியே வீட்டுக்குப் போ. உன்னிடத்திலுள்ள சொத்துக்களையெல்லாம் ஏழைகளுக்குக்கொடு. உனக்குச் செல்வம் விண்ணில் இருக்கிறது. ஆகவே, நீ என்னிடம் வந்து சிலுவையை எடுத்துக் கொண்டு என்னைப் பின்பற்றுவாயாக." இயேசுநாதர் இங்ஙனம் மொழிந்ததைக் கேட்ட அவன் விசனமுற்றவனாகத் துயரப்பட்டுக் கொண்டே வீட்டுக்குச் சென்றான். ஏனென்றால் அவனுக்கு நிறைய செல்வம் இருந்தது. நாமும் கிட்டத்தட்ட அவன் போன்றுதான் இருக்கின்றோம். எல்லாவற்றையும் துறந்து விடுங்கள் என்ற குரல் இரவும் பகலும் நம் காதில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது. உலக இன்பங்களுக்கும் துன்பங்களுக்கும் இடையில், உலகப் பொருள்களுக்கிடையில், நாம் மூழ்கி அந்தக் குரலோசையைக் கேட்காதவர்களாக இருக்கின்றோம். வாழ்க்கையில் க்ஷண நேரமாவது 'எல்லாவற்றையும் துறந்து என்னைப் பின்பற்றுவாயாக' என்னும் தெய்வீகக் குரல் காதில் ஒலிக்கிறது. "தங்களுடைய வாழ்வைத் தங்களுக்காக வாழ்கின்றவர்கள் வாழ்க்கையை இழக்கின்றார்கள். எனக்காக வாழ்க்கையைத் துறப்பவர்கள் வாழ்வில் பயன் அடைகிறார்கள்." இங்ஙனம் இயேசுநாதர் பகர்ந்துள்ளார். கடவுளுக்காக வாழ்க்கையைத் துறக்கின்றவர்கள் அழியாப் பெருநிலையை அடைகின்றார்கள். நம்மிடமுள்ள பல வினங்களுக்கிடையில் க்ஷணநேரமாவது, "உங்களிடத்திலுள்ளவையெல்லாவற்றையும் ஏழைகளுக்குக் கொடுத்துவிட்டு என்னைப் பின்பற்றுங்கள்" என்ற ஒலி நம் காதில் விழுகிறது. துறவுநெறியைத்தான் இயேசுநாதர் புகட்டினார். உலகத்திலுள்ள பெரிய பெரிய தீர்க்கதரிசிகளும் துறவு நெறியைத்தான் புகட்டியிருக்கிறார்கள்.

துறவு என்பதற்குப் பொருள் என்னவென்பது தெரியுமா? சுயநலமற்ற பாங்கே துறவுக்கு லட்சியமாகும். சுயநலமற்றவனாக இரு. தந்நலத்தை அறவே துறப்பது லட்சியமாகும். வலக்கன்னத்தில் ஒரு மனிதன் துறவியை அறைந்தால் துறவி தம் இடக்கன்னத்தையும் திருப்பிக் காட்டவேண்டும். துறவியிடம் ஒருவன் துறவி அணிந்திருக்கும் சட்டை வேண்டுமென்றால் அவர் தாம் உடுத்தியிருக்கும் உடையையும் தந்துவிடுவார்.

இலட்சியத்தை எந்த விதத்திலும் கீழே இறக்கிக்கொண்டு வராதபடி சிறந்த முறையில் நாம் கருமம் புரியவேண்டும். இலட்சியம் என்ன என்பதை அறிந்து கொள்ளுங்கள். சுயநலம் அறவே இருக்கக்கூடாது. தனக்கென்று சொத்து எதுவும் இருக்கக்கூடாது. நான் எனது என்பனவற்றையெல்லாம் தியாகம் செய்து விட்டு ஜீவபோதத்தை அறவே அழித்துவிட்டு இலங்குகின்ற மனிதன் கடவுளேயாகின்றான். நான் என்ற செருக்கு எந்த மனிதனிடத்தில் முற்றிலும் அழிக்கப்படுகின்றதோ அந்த மனிதன் லட்சிய மனிதனாகின்றான். நாம் இன்னும் அந்நிலையை அடையவில்லை. அந்நிலையை அடைவதற்கு முயல்வோமாக. பலமுறை நாம் வழுவ நேர்ந்தாலும் விடாமுயற்சியுடன் அந்த லட்சியத்தை அடைய முயல்வோமாக. இலட்சியத்தை அடைவது ஒரே நாளில் கைகூடலாம். அல்லது ஆயிரக் கணக்கான ஆண்டுகள் எடுத்துக்கொள்ளலாம். எப்பொழுதாகிலும் அந்த லட்சியத்தை நாம் அடைந்தேயாக வேண்டும். சுயநலத் தியாகமே குறியும் நெறியும் ஆகும். முற்றிலும் சுயநலமற்றவர்களாக நம்மைச் செய்து கொள்வது முக்தி நெறியாகும். நம்மிடத்துள்ள மனித அகங்காரம் அழிந்துபோய் விட்டால் தெய்வமே எஞ்சியிருக்கிறது.

மேலும் முக்கிய ஒரு கருத்தைத் தெரிவிக்கின்றேன். மக்களுக்குப் போதனை செய்த

பெருமக்களெல்லாம் தந்நலமற்றவர்களாக இருந்தார்கள். நாசரத்தில் தோன்றிய ஏசுநாதர் மக்களுக்குப் போதனை செய்துகொண்டிருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது மனிதன் ஒருவன் வந்து அவரிடம் பகர்வதாவது: "உங்களுடைய போதனை மிக அழகாக இருக்கின்றது; பரிபூரணநிலை அடைவதற்கு அதுதான் வழியென்று நான் நம்புகின்றேன். அவ்வழியைப் பின்பற்றுவதற்கு நான் ஆயத்தமாக இருக்கின்றேன். ஆனால் நீங்கள் மட்டும்தான் ஆண்டவனின் குழந்தை என்று எண்ணி உங்களை வழுத்தவேண்டும் என்ற அவசியம் எனக்கில்லை." அதற்கு ஏசுநாதர் என்ன விடை பகர்வார் தெரியுமா? "சகோதரரே! மிகவும் நன்று; உனக்குப் பிடித்தமான மார்க்கம் எதுவோ அதைப் பின்பற்றி நீ முன்னேற்றம் அடைவாயாக. என்னுடைய போதனைக்கு நீ மதிப்புத் தந்தாலும் சரி தராவிட்டாலும் சரி. நான் வியாபார நோக்கத்தோடு மதத்தைப் புகட்ட வரவில்லை; நான் ஒரு வியாபாரி அல்லன்; நான் உண்மை எதுவோ அதைப் போதிக்கின்றேன். உண்மை யாருக்கும் தனிச் சொத்தன்று; தனக்குத்தான் உண்மை உரியதென்று யாரும் சொல்ல முடியாது. உண்மையே கடவுள். உன் விருப்பமான மார்க்கத்தில் நீ முன்னேறுவாயாக." இங்ஙனம் ஏசுநாதர் விடை தருவார். ஆனால் தற்காலத்து அவருடைய சிஷ்யர்கள் என்ன சொல்லுகிறார்கள் தெரியுமா? "அவருடைய போதனையை நீங்கள் நடைமுறைக்குக்கொண்டு வந்தாலும் சரி, கொண்டு வராவிட்டாலும் சரி. நீங்கள் ஏசுநாதரைப் போற்றுவீர்களானால் நீங்கள் நரகத்திலிருந்தும் காப்பாற்றப்படுவீர்கள். அப்படி நீங்கள் அவரைப் போற்றாவிட்டால் உங்களுக்கு முக்தி இல்லை." இங்ஙனம் அவருடைய சிஷ்யர்கள் பகர்கின்றார்கள். ஏசுநாதருடைய போதனையை இத்தகைய கீழ்நிலைக்குக்கொண்டுவந்து விட்டார்கள். ஏசுநாதரின் தனித் தன்மைக்காகப் போராடுகிறார்கள். எந்தத்தலைவரைப்போற்ற விரும்புகிறார்களோ அந்தத் தலைவருக்கே தங்கள் செயல் மூலம் இழுக்கைத் தேடித்தருகிறார்கள். ஏசுநாதரே, இவர்களுடைய செயலைக் கண்டால், வெட்கம் அடைவார் என்பதை இவர்கள் உணராதிருக்கிறார்கள். இவ்வுலக மக்கள் அவரை நினைத்துப் பார்த்தாலென்ன? பார்க்காவிட்டாலென்ன? அவர் அதைப்பற்றிக் கவலைப் படமாட்டார். ஞானத்தை அவர் உலகுக்கு வழங்க வேண்டியிருந்தது. அதை அவர் முறையாக வழங்கினார். ஏழைகளுக்காக அவர் தம் வாழ்வனைத்தையும் தியாகம்பண்ண ஆயத்தமாக இருந்தார். பிறருக்கு நல்லுதவி புரிதலையே விரதமாகக் கொண்டுள்ளவர்கள் சமாரித்தர்கள் எனப்படுகின்றனர். மக்கள் அவரை வெறுத்தாலும் அவர்களுக்காக எத்தனை முறைவேண்டுமென்றாலும் தாம்துன்பப்படவும், தம்முயிரைத் தியாகம் பண்ணவும் ஏசுநாதர் ஆயத்தமாக இருந்தார். பெயர், புகழ் ஒன்றையும் விரும்பாது அவர் உலகுக்குத் தம் உயிரைக் கொடுத்தார். அமைதியாகவும், யாருக்கும் தெரியாமலும் கடவுள் செயல் நிகழ்வது போன்று அவருடைய செயல் நிகழ்ந்தது. இப்பொழுது அவருடைய சிஷ்யர்கள் என்ன பகர்கின்றார்கள் தெரியுமா? "நீங்கள் சுயநலமற்றவர்களாகவும், பரிபூரணர்களாகவும் இருக்கலாம்; ஆனால் நீங்கள் எங்களுடைய ஏசுவாகிய ஞானியைப் போற்றாவிட்டால் நீங்கள் அடைந்துள்ள பேற்றினால் பயன் எதுவுமில்லை." இங்ஙனம் அவர்கள் பகர்கின்றார்கள். ஏன் அவர்கள் அப்படிப் பகர்கிறார்கள்? இந்த அறியாமை அல்லது மூடநம்பிக்கைக்கு மூலகாரணம் என்ன? அவர்கள் கடவுள் ஒரே ஒரு தடவைதான் மானிட வடிவெடுத்து வருகிறார் என்று எண்ணுகின்றார்கள். இந்தக் கொள்கையில்தான் தவறு முழுவதும் இருக்கிறது. உங்களிடத்திலேயே கடவுள் வீற்றிருக்கின்றார்; இயற்கை முழுவதிலும் ஒரு தடவை என்ன நிகழ்கிறதோ அது முன்பும் நிகழ்ந்திருக்கவேண்டும், பின்பும் அது நிகழும். இயற்கையின் நியதிக்குக் கட்டுப்படாதது ஒன்றுமில்லை. இயற்கையின் நியதிப்படி ஒரு காலத்தில் ஒன்று நிகழ்வது முன்பும் நிகழ்ந்திருக்கவேண்டும்; பின்பும் நிகழும்.

இந்தியாவில் அவதாரபுருஷர்களைப் பற்றி இதே கருத்தைத்தான் கொண்டிருக்கிறார்கள். கிருஷ்ணவதாரம் பெரிய அவதாரமாகும். அவருடைய உபதேசமடங்கிய பகவத்கீதையை உங்களில் சிலர் படித்திருக்கலாம். அவர் அப்

பகவத்கீதையில் பகர்ந்திருப்பதாவது: "நான் பிறப்பற்றவன்; நான் மாறுதல் எதுவும் இல்லாதவன்; அனைத்துயிர்களுக்கும் நான் தலைவன்; என் பிரகிருதியை நான் வசப்படுத்திக் கொண்டு என்னுடைய மாயாசக்தியினால் நான் பிறப்பெடுக்கிறேன். எப்பொழுதெல்லாம் தர்மம் குன்றி அதர்மம் தலையெடுக்கிறதோ அப்பொழுதெல்லாம் நான் அவதாரம் செய்கின்றேன். நல்லோர்களைப் பாதுகாப்பதற்கும், தீயோர்களை அழிப்பதற்கும், தர்மத்தை நிலை நாட்டுதற்கும் நான் யுகந்தோறும் பிறப்பெடுத்து வருகின்றேன்." எப்பொழுதெல்லாம் இவ்வுலகம் கீழ்நிலையை அடைகின்றதோ அப்பொழுதெல்லாம் இதை மேலே தூக்கிவிடுவதற்குக் கடவுள் உதவுகின்றார். எனவே அவர் ஒவ்வொரு காலத்திலும் வருகின்றார். "எங்குப் பேராற்றல் படைத்தவரும் தூய்மை உடையவரும் ஆன மகாத்மா ஒருவர் மனித சமுதாயத்தின் முன்னேற்றத்துக்குப் பாடுபடுகின்றாரோ அவர் என்னுடைய பேரொளிப் பிழம்பிலிருந்து வந்தவர் என்பதையும் அவர் மூலம் நானே வேலை செய்கிறேன் என்பதையும் நீங்கள் அறிந்துகொள்ளுங்கள்." இங்ஙனம் அவர் மற்றோரிடத்தில் பகர்ந்திருக்கிறார்.

ஆகையால் நாம் நாசரத்தில் தோன்றிய ஏசுநாதரிடத்துக் கடவுளைக் காண்பது போன்று அவருக்கு முன் தோன்றிய மகான்களிடத்தும், அவருக்குப் பின் தோன்றிய மகான்களிடத்தும், இனிமேல் தோன்றப் போகும் மகான்களிடத்தும் கடவுளைக் காண்போமாக. நம்முடைய வழிபாடு எல்லைக்குக் கட்டுப்படாததாயும் சுதந்தரம் உடையதாயும் இருக்கட்டும். அகண்டமாகத் திகழும் பரம்பொருளின் தோற்றங்களாக மகான்களிருக்கிறார்கள்; அவர்கள் தந்நலமற்றவர்களாகவும், பரிசுத்தமே வடிவெடுத்தவர்களாகவும் இருக்கிறார்கள். தீனர்களாகிய நமக்காகப் போராடவும் உயிரைத் தியாகம் பண்ணவும் ஆயத்தமாக இருக்கின்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் நமக்காகவும், நமக்குப் பின்வரும் மக்களுக்காகவும் பெருந்துன்பப்பட்டிருக்கிறார்கள்.

உண்மையை ஆராயப்போனால் நீங்கள் யாவரும் தீர்க்கதரிசிகள் ஆவீர்கள். உலகச் சுமையை உங்கள் தோள்கள்மீது நீங்கள் சுமந்து கொண்டிருக்கிறீர்கள். தான் செய்த வினைப்பயனின் சுமையைப் பொறுமையாகவும் அமைதியாகவும் சுமந்து கொண்டிருக்காத ஓர் ஆடவனையாவது பெண்ணையாவது பார்த்திருக்கின்றீர்களா? தீர்க்கதரிசிகளெல்லாம் மாபெரும் வீரர்கள். அவர்கள் அண்டத்தையே தங்கள் மீது சுமந்துகொண்டிருக்கிறார்கள்! அவர்களோடு நம்மை ஒப்பிடுங்கால் நாம் மிகச் சிறியவர்களே. இதில் ஐயம் எதுவுமில்லை. இருந்தாலுய் நாமும் சிறிய அளவில் வினையைச் சுமந்துகொண்டிருக்கின்றோம். நம்முடைய வீடுகள் என்ற சிறிய வட்டத்தில் நாம் அனைவரும் சிலுவையைச் சுமந்துகொண்டிருக்கின்றோம். எத்தகைய பாவியும், பயனற்றவனும் தன்னுடைய சிலுவையைத் தூக்காமலிருக்க முடியாது. நாம் செய்த பிழைகள் எவ்வளவோ இருப்பினும், தீய எண்ணங்களும், தீயசெயல்களும் எவ்வளவோ இருப்பினும் தெய்வீக ஒளியினிடத்து நாம் யாண்டும் தொடர்பு கொண்டிருக்கின்றோம். அந்தத் தொடர்பு அறுபட்டுப் போகுமாயின் அந்த க்ஷணமே அழிவு நிச்சயம் என்பதை அறிந்து கொள்ளுங்கள். நம்மில் யாருக்கும் அழிவில்லை; நம்முடைய இருதயத்தில் எங்கேயோ ஓரிடத்தில் நாம் எவ்வளவு கீழ்மையுற்றிருந்தாலும் தெய்வ ஒளிவட்டம் இருக்கிறது. அது யாண்டும் தெய்வத்தோடு சேர்ந்திருக்கிறது. ஆகவே, நாம் தெய்வத்தோடு சேர்ந்துவிடலாம் என்பதை உணருங்கள்.

பெருவாழ்வு வாழ்ந்து ஞானத்தை நமக்குத் தந்த தீர்க்கதரிசிகள் எந்த மனித இனத்தைச் சார்ந்தவரானாலும், எந்த நாட்டைச் சார்ந்தவரானாலும், எந்தக் குலத்தைச் சார்ந்தவரானாலும் அவருக்கு நம்முடைய அஞ்சலி உரியதாகுக. மனித இனத்துக்காகப் பாடுபட்ட தெய்வத்தன்மை பொருந்திய ஆடவர்களும் மகளிரும் எக்குலத்தில் பிறந்தவர்களானாலும், எந்த வருணத்தைச் சேர்ந்தவர்களானாலும், எந்த இனத்தைச் சேர்ந்தவர்களானாலும் அவர்களுக்கு நம்முடைய அஞ்சலி உரியதாகுக. நம்முடைய பின் சந்ததியார்களுக்குத் தந்நலமற்றுத் தெய்வீக வாழ்வு வாழ்ந்து பாடுபடும் எதிர்காலப் பெரியோர்களுக்கு நம்முடைய அஞ்சலி உரியதாகுக. (முற்றும்)

---

# ஈசுவரவழிபாடு

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1976ஆம் ஆண்டு விருதுநகர் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

( 109ஆம் பக்கத் தொடர்ச்சி )

சத்தியமே தெய்வம். சத்தியத்தைக் கடைப்பிடிக்கிற அளவு தெய்வத்தைப் போற்றுகின்றவர்களாகின்றோம். வாழ்க்கையில் வாய்மையில் நிலைபெற்றிருக்க வேண்டும். வாய்மையில் நிலைபெற்றிருப்பதற்கு மகாபாரதத்தில் சான்று இருக்கிறது. பாண்டவர்கள் மாறுவேடம் பூண்டு வனத்திலிருந்தபோது பாஞ்சால தேசத்து மன்னன் துருபதனின் மகள் திரௌபதியினுடைய சுயம்வரம் நிகழ்ந்தது. அந்தச் சுயம்வரத்துக்குப் பாண்டவர்களும் சென்றார்கள். சுயம்வரத்துக்காக ஏற்பட்ட நிபந்தனையில் அங்கு வந்திருந்த அரசர்களெல்லாரும் தோல்வி அடைந்தார்கள். மாறுவேடம் பூண்டிருந்த அர்ச்சுனன் வெற்றி பெற்றுத் திரௌபதியைப் பெற்றான். பாண்டவர்கள் ஐவரும் தாங்கள் தங்கியிருந்த வீட்டுக்குத் திரௌபதியுடன் வந்தார்கள். வீட்டுக்கு வெளியிலிருந்தவாறே யுதிஷ்டிரன் குந்தி தேவியை அழைத்து, ''அம்மா! நாங்கள் ஒரு நூதனமான பிட்சை இன்று கொண்டு வந்திருக்கிறோம்'' என்றார். குந்திதேவி அது எத்தகைய பிட்சை என்று திருப்பி அவர்களைக் கேட்காது, ''நீங்கள் ஐவரும் அதை அனுபவியுங்கள்'' என்றாள். அங்ஙனம் சொல்லிவிட்டு வெளியில் வந்து பார்த்தபொழுது பாண்டவர்கள் ஐவருடன் அவர்கள் பிட்சையாகக் கொண்டு வந்த திரௌபதியும் நின்றாள். அப்பொழுது குந்திதேவி தனக்குத் தானே எண்ணியதாவது: ''நான் பிறந்த நாள் முதல் இதுவரையிலும் பொய் சொன்னதில்லை. நான் சொன்ன சொல்லும் பொய் போனதில்லை. இன்றைக்கு இத்தகைய வாக்கு என் வாயிலிருந்து ஏன் வந்தது? இதை நான் எப்படி மெய்யாக்குவேன்?'' இங்ஙனம் குந்திதேவி சிந்தித்துக் கொண்டிருந்தபோது குந்திதேவியின் எண்ணத்தை யுதிஷ்டிரன் குறிப்பால் அறிந்து கொண்டார். தர்மத்துக்கு மாறான எண்ணம் அவருடைய உள்ளத்தில் என்றும் எழுந்ததில்லை. அவர் எண்ணியதாவது: ''தாய் சொல் மிக்க வாசகம் இல்லை. தாயினுடைய வாக்கிலிருந்து ஐவரும் திரௌபதியை அனுபவியுங்கள் என்ற வாசகம் வந்துவிட்டது. அவருடைய வாக்கைச் சத்திய வாக்காக்குவதற்கு ஐவரும் திரௌபதியை மனைவியாக ஏற்றுக்கொள்ளலாமா?'' இங்ஙனம் அவர் எண்ணிக் கொண்டிருந்தபோது அவருடைய உள்ளத்திலிருந்து, ''திரௌபதியை மனைவியாக ஏற்றுக்கொண்டால் தர்மத்துக்கு முரண்பாடு வந்துவிடாது'' என்ற விடை வந்தது. வியாசரும் அங்கு வந்து திரௌபதியை ஐவரும் மனைவியாக ஏற்றுக்கொள்வதற்கு அனுமதி கொடுத்த பிறகு திருமணம் நிகழ்ந்தது. எல்லாம் மங்கலமாக முடிந்தன. சத்தியம் பேசுகின்றவர்களுக்கு ஓர் அலாதி சக்தி உண்டாகிறது. அப்பர் சுவாமிகள், ''பேசுவதென்றால் சிவனைப் பற்றிப் பேசு. இல்லையேல் மௌனமாக இரு'' என்று நாவுக்கு உத்தரவு போட்டார். அவர் உத்தரவின்படி நாவும் நடந்து கொண்டது. எனவே அவர் நாவுக்கரசரானார். நாமும் உலக விஷயங்களில் வாய்மை பிசகாது நடந்துகொள்வோமேயானால் பரிபாகம் அடைந்தவர்களாவோம்.

''நேயமே நெய்யும் பாலா நிறைய நீர் அமைய ஆட்டி'' என்கிறார் அப்பர் சுவாமிகள். பண்பட்ட மனது அன்பு சொரூபம் ஆகிறது. இயற்கையை ஆராய்ந்து பார்த்தால் உயிர்கள் யாவும் அன்பு சொரூபமாக இருக்கின்றன என்பது விளங்கும். தாய்ப்பறவை தன் குஞ்சினிடம் அன்பு செலுத்துகிறது. விலங்கு தன் குட்டியிடம் அன்பு செலுத்துகிறது. பிரபஞ்சம் முழுவதும் அன்பு சொரூபமாக இருப்பதால் பிரபஞ்ச வாழ்க்கை இனிது நடந்து வருகிறது. அன்பு தூயதாக மாறி அமையும்பொழுது தெய்விகம் திகழ்கிறது. பிரபஞ்சப் பொருள்களிடத்துச் செலுத்தும் அன்பு மலினப்பட்ட அன்பாகும். தெய்வத்திடத்துச் செலுத்தும் அன்பு தூய அன்பாகும்.

''அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே''

என்பது திருமூலர் வாக்கு. கண்ணன் தம் வாழ்க்கையில் அன்பை விளையாட்டாகக் காட்டித் தந்தார். உயிர்கள் அனைத்தையும் கண்ணன் அன்பில் ஒன்றுபடுத்தினர். உலக அன்பைத் தெய்வ அன்பாக மாற்றுவதற்குக் கண்ணன் கோபிகளுக்குச் சந்தர்ப்பம் கொடுத்தார். உலக அன்புக்கும் தெய்விக அன்புக்கும் மூன்று வேற்றுமைகளிருக்கின்றன. உலக அன்பு சுயநலம் படைத்தது. உலக அன்பு தெய்வ அன்பாக மாறுமிடத்து அது நம்மைப் பரந்த அன்பு உடையவர்களாக மாற்றுகிறது. காதலன் காதலிக்கிடையில் ஏற்பட்டுள்ள அன்பு சுயநலம் படைத்ததாகும். அவ்வன்பு உடலோடு சம்பந்தப்பட்டது. அவ்வன்பில் வேறு யாராவது பங்குக்கு வந்தால் கொலையும் நிகழ்ந்துவிடலாம். தன் குழந்தையிடம் பிறர் அன்பு செலுத்தினல் தாய் மகிழ்ச்சி அடைகின்ருள். தாய் தன் குழந்தையிடத்துச் செலுத்தும் அன்பில் சுயநலமில்லை. சுயநலமற்ற அன்பில் எல்லார்க்கும் பங்குண்டு. உலக அன்புக்கும் தெய்வ அன்புக்குமுள்ள இரண்டாவது வேற்றுமை என்ன என்பதைக் காண்போம். தெய்வ அன்பில் வியாபாரப் புத்திக்கு இடமில்லை. உலக அன்பு வியாபாரப் புத்தியைக் கொண்டது. தெய்வ அன்பு கொடுக்கின்றது; தனக்கென்று எதுவும் கேட்பதில்லை. உலக அன்பு கொடுப்பதில்லை; அது கேட்கிறது. உலக அன்பு படைத்தவர்கள் கோயிலுக்குச் சென்று, '' இறைவா! வியாபாரத்தில் எனக்கு லாபம் வந்தால் அதில் ஒரு சிறு பகுதியை உனக்குக் காணிக்கை செலுத்துகிறேன் '' என்று உலகத்தவர்கள் கடவுளோடு வியாபாரம் செய்கின்றனர். இத்தகைய பிரார்த்தனையின் மூலம் மனதில் மேலும் மாசு படிகின்றது. நாம் நேர்மையான முறையில் பொருளீட்டி அதில் ஒரு பகுதியைச் சத்காரியங்களுக்காகச் செலவிடக் கடமைப்பட்டிருக்கின்ரேம். அப்படிச் செய்தால் அது நேர்மையான வழிபாடு. பிரம்மாண்டமான கோயிலைக் கட்டியவர்கள் தங்களை யாரென்று காட்டிக் கொள்ளாதவர்களாக இருக்கின்ருர்கள்; அவர்கள் பெரியவர்கள். அக்கோயிலில் விளக்குகள் போட்டுவிட்டு அவ்விளக்குகளில் தங்களுடைய பெயர்களை எழுதி விளம்பரப் படுத்திக் கொள்ளுகின்றவர்கள் இருக்கிருர்கள். அப்படிச் செய்யும்பொழுது தெய்வம் பின்னணிக்குப் போய் மனிதன் முன்னணிக்கு வருகின்ருன். இந்த உலக அன்பில் சுயநலமிருக்கிறது. உலக அன்புக்கும் தெய்வ அன்புக்கும் இடையிலுள்ள மூன்ருவது வேற்றுமையை எடுத்துக் கொள்வோம். உலக அன்பில் பயம் இருக்கிறது; தெய்வ அன்பில் பயம் போய்விடுகிறது. ஒளி வரவர இருள் போவது போன்று தெய்வ பக்தி வர வரப் பயம் போய் விடுகிறது. பாம்பு என்ருல் பயம் உண்டாகிறது. குழந்தை வீதியில் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது அக் குழந்தைக்குப் பக்கத்தில் பாம்பு வருவதாக வைத்துக் கொள்வோம். அக்காட்சியைப் பார்த்துவிட்ட தாய் பாம்பைக் கண்டு பயப்படாது குழந்தையைப் போய் எடுத்துக் காப்பாற்றுகின்ருள். தாயின் அச்செயலுக்குக் காரணம் குழந்தையின் மேலுள்ள அன்பேயாகும். இங்கு பாம்புக்குப் பயப்படுதல் என்பது பின்னணிக்குப் போய்விடுகிறது. சாவித்திரி சத்தியவான்மீது வைத்த அன்பின் விளைவாக மரணத்தை வென்ருள். இத்தகைய அன்பை வளர்ப்பதற்குப் பெரியோர்கள் வழி காட்டித் தந்துள்ளார்கள். நமக்குப் பிரியமாக உள்ளதைத் தெய்வத்துக்கு நைவேத்தியமாகப் படைத்துப் பின் பிரசாதமாக எல்லாருக்கும் வழங்கவேண்டும். விவசாயி அறுவடை செய்த நல்ல தானியத்தைத் தெய்வத்துக்கென்று ஒதுக்கி வைக்கின்ருன். அங்ஙனம் அவன் சம்பாதிப்பதில் ஒரு பகுதியைத் தெய்வத்துக்குக் காணிக்கையாக ஒதுக்கி வைக்க வேண்டும். தெய்வத்துக்குப் படைப்பதை நாம் திருப்பிக் கேட்பதில்லை. ஒன்றைக் கொடுத்து அதற்குப் பதிலாக ஒன்றைப் பெற விரும்புவது சுயநலம். பக்தன் தன்னிடத்து இருப்பதையெல்லாம் தெய்வத்துக்கும், தெய்வத்தின் பெயரால் உலகுக்கும் தந்து விடுகின்ருன். தனக்கென்று அவன் ஒன்றைக் கேட்பதில்லை. அவன் தன்னை விளம்பரப் படுத்துவதுமில்லை. அத்தகைய அன்புதான் தெய்விக அன்பு ஆகிறது. அத்தகைய அன்பை வளர்ப்பது நல்ல ஈசுவர வழிபாடு ஆகிறது.

'' பூசனை ஈசனர்க்குப் போற்றவிக் காட்டி

னேமே" என்கிருர் அப்பர் சுவாமிகள். அவி என்பது 'ஹவிஸ்' என்பதன் திரிபுபட்ட நிலையாகும். குப்பை கூளங்களையெல்லாம் தீயிலிட்டுக் கொளுத்தினல் அவை வெந்து காற்ருேடு கலந்து தாவரங்களுக்கு உணவாக ஆகின்றன. அங்ஙனம் வேள்வித்தீ வளர்த்து அதில் நெய்யை ஹவிஸாகச் சொரிந்து அது நல்ல மனப்பான்மையுடையவர்களுக்கெல்லாம் போகட்டும் என்று பிரார்த்தனை செய்தால் அது அபூர்வம் என்கிற மந்திர சக்தியோடுகூடி அவர்களுக்குப் பயன்படும் நிலையில் போய்ச் சேருகின்றது. மனிதன் தன்னுடைய ஜீவிதத்தை மற்றவர்களுக்குப் பயன்படும்படி செய்கிறபொழுது அது ஹவிஸாக மாறுகிறது. அப்படி ஜீவிதத்தைப் பயன்படுத்துகிறவன் தெய்வ சொரூபமாக மாறுகின்ருன். கைம்மாறு கருதாது நீ கடவுளுக்கும் உலகுக்கும் உன்னை வழங்கிக்கொண்டே இருப்பாயானல் நீ வழங்குவது பத்து மடங்கு பெருகி உனக்கே வருகிறது. ஆனல் நீ திரும்பப் பெறவேண்டும் என்ற எண்ணம் கொள்ளாதே. கொடுத்துக் கொண்டேயிரு. நீ எல்லா நலன்களையும் அடைவாய். திரும்பப் பெறுவதை நினைத்துப் பாராது கொடுத்துக் கொண்டேயிருப்பவன் எத்தகையநலன் அடைகிருன் என்பதை ஸ்ரீராம கிருஷ்ணர் ஒரு சான்றின் மூலம் விளக்குகிருர். பணக்காரன் ஒருவனிடம் வேலைக்காரன் ஒருவன் வேலை கேட்டான். "என்ன வேலை செய்வாய்? எவ்வளவு சம்பளம் வேண்டும்?" என்று பணக்காரன் கேட்டான். "என்ன வேலை கொடுத்தாலும் செய்ய ஆயத்தமாயிருக்கிறேன்; சம்பளம் தருவதை வாங்கிக்கொள்கிறேன்" என்று வேலைக்காரன் கூறினன். ஒரு மாதம் வேலை செய்வதைப் பார்த்துவிட்டுச் சம்பளம் தருவதாகக் கூறி அவனை வேலையில் அமர்த்தினர். கொடுத்த வேலையை அவன் கிரமமாகச் செய்தான். மாத முடிவில் அவனுக்கு ஐம்பது ரூபாய் தரலாம் என்று எஜமானன் மனதில் நினைத்தான். ஆனல் ஆரம்பத்திலேயே அவ்வளவு தரக்கூடாது என்று எண்ணி நாற்பது ரூபாய் தந்தான். வேலைக்காரன் மேலும் ஏதாவது கேட்டால் இன்னும் ஐந்து ரூபாய் கொடுக்கலாமென்று எண்ணினன். ஆனல் வேலைக்காரனே கொடுத்ததை வாங்கிக் கொண்டு போய்விட்டான். அவன் மேலும் தனக்கு எதுவும் வேண்டுமென்று கேட்கவில்லை. அவன் வேலையைத் தொடர்ந்து ஒழுங்காகச் செய்து வந்தான். அச்செல்வந்தனுக்கு லௌகீக புத்தி தலையெடுத்தது. எனவே அவன் தான் தந்த நாற்பது ரூபாய் அதிகம்என்று எண்ணிஐந்து ரூபாயைக்குறைத்துக்கொண்டு முப்பத்தைந்து மட்டும் தந்தான். தந்ததை வாங்கிக்கொண்டு அவன் பேசாது போய்விட்டான். அவன் வேலையை ஒழுங்காகச் செய்துவந்தான். சில நாட்களுக்குப் பிறகு செல்வந்தன் வேலைக்காரனை அழைத்து "முதல் மாதம் எவ்வளவு சம்பளம் வாங்கினய்?" என்று கேட்டான். "நாற்பது ரூபாய் வாங்கினேன்" என்று கூறினன். "இந்த மாதம் எவ்வளவு சம்பளம் வாங்கினய்?" என்று கேட்டான். "இந்தமாதம் முப்பத்தைந்து ரூபாய் சம்பளம் வாங்கினேன்" என்று கூறினன். "ஐந்து ரூபாய் குறைந்ததை நீ ஏன் கேட்கவில்லை?" என்று கேட்டான். "நீங்கள் தருகின்ற சம்பளத்தை வாங்கிக்கொள்வதாகக் கூறித்தானே நான்வேலையில் அமர்ந்தேன். குறைத்துத் தருவது உங்களுடைய இஷ்டம்" என்ருன். இவனைக் கைதூக்கிவிடுவது தன்னுடைய பொறுப்பு என்பதை எஜமானன் முற்றிலும் உணர்ந்தான். வஞ்சகமில்லாத அந்த வேலைக்காரனுக்கு நிகர் பக்தனுகின்ருன். உடல் பொருள் ஆவி அனைத்தையும் பக்தன் தெய்வத்துக்குக் கொடுக்கின்ருன். பக்தன் தெய்வத்திடமிருந்து எதையும் கேட்பதில்லை. பக்தன் கடவுளைக் கடன்காரனக்கி விடுகின்ருன். பக்தன் தன்னை முழுவதும் பகவானுக்குக் கொடுத்துவிடுவதால் பகவான் தம்மை முழுவதும் பக்தனுக்குக் கொடுத்துவிடுகின்ருர்.

"தந்தது உன் தன்னைக் கொண்டது
என் தன்னைச்
சங்கரா ஆர் கொலோ சதுரர்
அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
யாது நீ பெற்றது ஒன்று என்பால்"

என்கிருர் மாணிக்கவாசகர். மாணிக்கவாசகர் பகவானுடன் பண்டமாற்று வியாபாரம் செய்தார். அவர் தம்மைப் பகவானுக்குக் கொடுத்துப் பகவானைத் தாம் பெற்றுக்கொண்டார். பகவானைத் தாம் பெற்றதால் அகண்ட

பேரானந்தம் பெற்ருர். அவரைப் பகவான் பெற்றதால் பகவான் ஒரு லாபமும் அடைய வில்லை. எனவே அவர் கடவுளுக்குப் பித்தன் என்ற பெயர் பொருத்தம் என்கின்ருர். உயிர் களையெல்லாம் தம் மயமாக்க வேண்டுமென்ப தில் கடவுள் பித்துக் கொண்டிருக்கின்ருர். நாம் உலகை நம் மயமாக்குவதில் பித்துப் பிடித்தவர்களாக இருக்கின்ருேம். அன்பர் ஒருவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கேட்டதா வது: "தெய்வச் சிந்தனை அதிகம் செய்வதால் பித்துப்பிடித்து விடாதா?" அதற்கு ஸ்ரீ ராம கிருஷ்ணர் பகர்ந்ததாவது: "உலகிலுள்ள வர்களெல்லாரும் பித்தர்களே ஆவார்கள். சிலர் பணப்பித்துப் பிடித்தவர்களாக இருக் கிருர்கள். சிலர் போகப் பித்துப் பிடித்தவர் களாக இருக்கிருர்கள். சிலர் புகழ்ப் பித்துப் பிடித்தவர்களாக இருக்கிருர்கள். சிலர் பதவிப் பித்துப் பிடித்தவர்களாக இருக்கிருர்கள். கடவுள் பித்துப் பிடித்தவர்கள் மிகக் குறைவு. மற்றவற்றை யெல்லாம் பற்றிப் பித்துப்பிடித் திருப்பதைவிடக் கடவுள்பித்து எவ்வளவோ மேலானது. கடவுள் பித்துப்பிடித்தவன் உண் மைக்கு அருகில் போகின்ருன். மற்ற பித்துப் பிடித்தவர்கள் உண்மைக்கு வெகு தூரத்திலி ருக்கிருர்கள். கடவுள்பித்துப் பிடிப்பது அவரு டைய கருணையினுல் அமைகிறது. நம்மைக் கடவுள் பித்தர்களாக்குவது நல்லது." அற்பர் களாகிய நம்மைக் கொடுத்துப் பெரிய பொரு ளாகிய கடவுளைப் பெறுவதற்கு நிகரான பேறு வேறு எதுவாக இருக்கமுடியும்! "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்த னெனக்கருளியவாறு ஆர் பெறுவார் அச் சோவே!" என்னும் கோட்பாட்டில் இறைவன் நம்முடைய சித்தமலத்தை அறுவித்து நம்மைச் சிவமாக்குகிருர் என்பது தெளிவாகிறது. நம்மை முற்றிலும் தெய்வத்திடம் ஒப்படைக் கிறபோது நமக்கு அவர் இந்த அரிய பேற்றி னைத் தருகின்ருர். மானுடப் பிறவி ஒன்றில் தான் இந்த அரிய பேறு பெறுவது சாத்தியம். எனவே, மனிதப்பிறவி அரியபிறவி எனச் சொல்லப்படுகின்றது. மானுடப் பிறவியைப் பெற்றும் வாழ்க்கையை அற்ப விஷயங்களில் செலுத்தி வீண்விரயம் செய்வானுகில் அவன் வாழ்க்கையை விரயம் செய்தவனுகின்ருன். வாழ்க்கையைத் தெய்வத்துக்கென்று ஒப்ப டைத்துத் தெய்வத்தின் அருள்பெற்றுச் சித்த மலத்தைப் போக்கிச் சிவமாக்குகின்றவன் சிறந்த ஈசுவர வழிபாடு செய்தவனுகின்ருன்.

யாவற்றையும் தெய்வத்துக்கென்றுகொடுத்து விடுவது நம் நாட்டின் சிறப்பு. ரஷ்யாவில் கம்யூனிஸக் கொள்கைப்படி எல்லாரும் பொது இடத்தில் உணவு ஏற்றுக்கொள்ள வேண்டும். தங்களுக்காக என்று யாரும் சமைக்க வேண் டியதில்லை. அவர்களுக்குக் கொடுத்துள்ள வேலையை அவர்கள் செய்யவேண்டும். வேலையை முடித்துவிட்டுப் பொது இடத்தில் போய் உணவு கேட்டால் அவர்களுக்கு உணவு கிடைக்கும். அங்கு யாவும் அரசாங்கச்சொத் தாக இருக்கிறது. அரசாங்கம் சொன்னபடி வேலை செய்துவிட்டு உணவு பெறவேண்டும். வேலையில் பிசகினுலோ, மாறுபட்ட கொள் கையை உடையவனுக இருந்தாலோ ஆளைக் காண முடியாது. ஆள் என்னவானுன் என்று கேட்கவும் முடியாது. ஆனல் நம் நாட் டில் செல்வங்களையெல்லாம் கோயிலுக்கு ஒப் படைக்கின்ருர்கள். அவற்றைப் பயன் படுத்தி அங்கு வருகின்றவர்களுக்கெல்லாம் பிரசாதம் வழங்குகின்ருர்கள். சொத்தைக் கொடுத்தவருக்குக் கொடுத்துள்ளேன் என்ற அகங்காரமில்லை. தெய்வத்தினுடைய சொத் தைத் தெய்வத்துக்கே கொடுத்துவிட்டேன் என்று அவர் எண்ணுகின்ருர். எனவே கொடுத் தவருக்குக் கொடுத்தேன் என்ற அகங்காரம் எழுவதற்கு இடமில்லை. பெற்றுக்கொள்ப வருக்கு ஏற்கிறேன் என்ற இழிவு மனப் பான்மை இல்லை. ஈசுவரப் பிரசாதமாக ஏற்று அருந்துவதில் அவர் புனித உணர்வு பெறு கின்ருர். ரஷ்யாவில் உள்ள ஏற்பாட்டில் கேட்டுக்கு இடமிருக்கிறது. நம் நாட்டுப் பெரியோர்கள் செய்துள்ள ஏற்பாட்டில் தீமை களெல்லாம் அகற்றப்பட்டு நலனே விளைகிறது. நம் நாட்டுப் பண்பை நாம் ஞாபகத்தில் வைக்க வேண்டும். தெய்வத்துக்குக் கொடுக்கின்ற மனப்பான்மையை வளர்ப்பது நல்ல ஈசுவர வழிபாடு ஆகிறது.

இந்தியா புனித நாடு என்று போற்றப்படு கிறது. "தங்களுக்குக் கடைசிப் பிறவியாக உள்ளவர்கள் இந்தியாவில் பிறப்பெடுக்கிருர்

கள்'' என்று சுவாமி விவேகானந்தர் பகர்ந் துள்ளார். நல்ல முறையில் வாழ்ந்து தங்களைத் தெய்வத்திடம் ஒப்படைக்க வேண்டும் என்ற எண்ணம் உடையவர்கள் அனைவரும் இந்தியாவில் பிறப்பெடுக்கிறார்கள். இந்தியப் பண்பில் ஊறிய நாம் தெய்வத்துக்கு நம்மை ஒப்படைத்தல் என்ற பண்பை மறந்து விடக் கூடாது. நாம் தெய்வக் குழந்தைகளாவோம். தெய்வ வழிபாட்டுக்காகவே நாம் மானுடப் பிறப்பெடுத்து வந்திருக்கின்றோம். திரிகரண சுத்தியுடன் கண்ணுங்கருத்துமாக நாம் கடவுள் வழிபாடு செய்துவரவேண்டும். வாழ்க்கையில் பிரம்மச்சரியம், கிரஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்ற நான்கு ஆசிரமங்கள் இருக்கின்றன. இந்த நான்கு ஆசிரமங்களில் எந்த ஆசிரமத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் நாம் கடவுள்வழிபாடு செய்யக்கடமைப் பட்டு இருக்கின்றோம். அப்பொழுதுதான் நாம் மானுட ஜன்மத்தை நன்கு பயன்படுத்தியவர்களாகின்றோம். வாழ்க்கையிலுள்ள பல கேடுகளை ஒதுக்குவதற்குக் கடவுள் வழிபாடே சிறந்த உபாயம் ஆகின்றது. துக்கத்தைத் துடைப்பதற்கும் அதுவே உற்ற உபாயமாகிறது. கடவுள் வழிபாட்டில் ஆழ்ந்து போகுமளவு இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்ற நிலை நமக்கு உண்டாகின்றது. கடவுள் வழிபாட்டில் உச்சநிலைக்குப் போய்விட்டால் இப்பிரபஞ்சத்திலேயே பேரின்பத்தில் நிலைபெற்றிருக்கலாம். பெறுதற்கரிய மானுடப் பிறப்பை நாம் பெற்றிருக்கின்றோம். வாழ்க்கையை எவ்வாறு நடாத்தினால் நாம் பெரியநிலையை அடைய முடியும் என்பதையும் அறிந்திருக்கிறோம். இனி கண்ணும் கருத்துமாகத் தெய்விகப் பெருவாழ்வில் ஈடுபட்டுத் திரிகரணங்களையும் கடவுள்வழிபாட்டுக்கென்றே பயன்படுத்தி வருவோமாக. கடவுளிடம்செலுத்தும் அன்பு எல்லா உயிர்களிடத்தும் செலுத்தப்படும் அன்பாக மாறுகிறது. இறைவனுடையதிருவருளால் இத்தகைய பாரமார்த்திகப் பெருவாழ்வில் அல்லும் பகலும் ஈடுபட்டு ஜன்மசாபல்யம் அடைவோமாக. நம் உள்ளத்தில் குடிகொண்டிருக்கின்ற பரமன் ஓயாது நமக்குத் துணைபுரிந்துகொண்டிருப்பாராக. ஈசுவர வழிபாடு என்னும் செயல் நம் வாழ்வில் உச்ச நிலையை அடைவதாகுக. (முற்றும்)

## ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய முதல் தெய்விக அனுபவம்

கதாதரன் என்பது பெற்றோர்கள் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு இட்ட பெயராகும். கதாதரன் சிறுவனாக இருந்தபொழுது ஒருதடவை கிராமப் பகுதியிலுள்ள வயல் வெளிக்கு உலாவச் சென்றான். கண்ணைக் கவரும் பசுமையான காட்சி எங்குத் திரும்பிப் பார்த்தாலும் அமைந்திருந்தது. அக்காட்சியைக் கண்டு ரசித்தவண்ணம் அடிமேல் அடிவைத்துக் கதாதரன் நடந்துகொண்டிருந்தான். தலைநிமிர்ந்து ஆகாயத்தைப் பார்த்தபொழுது கருமை நிறம் வாய்ந்த மேகக்கூட்டங்கள் மனதைக் கவரும் வண்ணமாக அசைந்துகொண்டிருந்தன. அம் மேகக்கூட்டங்களின் கீழ் வெண்மை நிறம் வாய்ந்த கொக்குக் கூட்டங்கள் பறந்து சென்றன. இத்தகைய பசுமை, வெண்மை, கருமை நிறங்களோடு கூடிய காட்சிகளை ஏக காலத்தில் பார்த்தபொழுது அவனுடைய இளம் உள்ளத்தில் பேரின்ப உணர்ச்சி தூண்டி விடப்பட்டது. பரவசநிலை அடைந்த தெய்விகப் பாலகன் தன்னையும் சுற்றுப்புறத்தையும் முற்றிலும் மறந்து ஆனந்தத்தில் மூழ்கியவனாகக் கீழே விழுந்துவிட்டான். தரையில் வீழ்ந்த கதாதரனைக் கண்ட அவன் நண்பர்கள் பயமும் பதற்றமும் அடைந்தார்கள். தாய் தந்தையருக்கு விஷயத்தைத் தெரிவிக்கக் கதாதரனை வீட்டுக்குத் தூக்கிச் சென்றார்கள். சிறிது நேரத்துக்குப் பின் உலக நினைவுபெற்றுப் பழைய நிலையை அடைந்தான்.

எதிர்பாராது ஏற்பட்ட இந்த நிகழ்ச்சி கதாதரனது தாய் தந்தையர்களான க்ஷுதிராம் சட்டர்ஜிக்கும், சந்திரமணி தேவிக்கும் மனவருத்தத்தை ஏற்படுத்தியது. கதாதரன் அடைந்த பேரின்ப நிலையைக் கதாதரன் உணர்ந்தான். ஸ்ரீராமகிருஷ்ணரின் முதல் தெய்விக அனுபவம் அதுஆகும். அவர் பெற்றிருந்த பெருநிலைக்கு அது சிறந்த சான்றாகிறது.

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் -116

678. भाषारूपा பாஷாரூபா—மொழி களின் வடிவங்களில் இருப்பவள் என்பது இதன் பொருள்.

உலகிலே மொழிகள் பல இருக்கின்றன. அவையாவும் நாதபிரம்மத்தின் வெவ்வேறு தோற்றங்களாம். நாதபிரம்மமாக இருப்ப வளும் அம்பிகை. அந்தந்த மொழிகள் மயமாக இருப்பவளும் அவளே. ஒவ்வொரு மொழி யிலும் சிறப்பு ஒன்று உண்டு. அவரவர் பாஷையையே பெருமைப்படுத்திப் பேசுவது உலகத்தவர் போக்கு. மற்று நடு நிலையி லிருந்து ஆராய்ந்து பார்த்தால் கருத்துக்களை வழங்குதற்கென்றே அமைந்துள்ள மொழி களில் எல்லாம் மேன்மை மிளிர்கிறது. அம் பிகையைப்பற்றிய மகிமைகளை யெல்லாம் விஸ்தாரமாக விளக்கியிருப்பது வடமொழி எனப்படும் சமஸ்கிருதத்திலேயாம். அதற் குக் காரணம் உண்டு. அம்பிகையின் உபா சனையில் மேல் நிலைக்குச் சென்றவர்களுள் பல பேர் சமஸ்கிருதம் தெரிந்தவர்களாம். மேலும் தத்துவ ஆராய்ச்சிக்கென்றே அலாதி யாக அமைந்துள்ள பாஷை சமஸ்கிருதம். தத்துவங்களை விளக்குவதற்குச் சமஸ்கிருதம் பயன்படுவது போன்று மற்ற மொழிகள் பயன் படமாட்டா. தத்துவ பரிபாஷைக்குரிய பதங் கள் ஏராளமாக இம்மொழியில் இருக்கின்றன. சிறப்பிக்கின்ற பாங்கில் சமஸ்கிருதம் தேவ பாஷை எனப் போற்றப்படுகிறது. ஆனால் தத்துவதரிசிகள் அத்தகைய குறுகிய மனப் பான்மை படைத்திருப்பவர்கள் ஆகமாட்டார் கள். சௌந்தரியலஹரியில் எத்தகைய தெய் விகம் திகழுகிறதோ, அதே தெய்விகம் குமர குருபர சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளி யுள்ள மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழிலும் திகழுகிறது. காளிகாதேவியின் மகிமையை விவேகானந்த சுவாமிகள் ஆங்கிலத்தில் ஒரு கவிதையாக அமைத்திருக்கிறார். அதே அருள் நிலையில் வைத்து அக்கவிதையை மற்றொரு மொழியில் அமைக்க முடியாது. இதினின்று உண்மையொன்று வெளியாகிறது. பாஷை ஒன்றை வாகனமாகக் கொள்ளும் ஞானியி னுடைய பாங்குக்கேற்ப அந்தப் பாஷையிலும் மகிமை வந்து அமைகிறது. பின்பு அன்னை பராசக்தியே அனைத்துமாயிருப்பதால் பிர பஞ்சம் எங்குமிருக்கும் மொழிகள் மயமாக அவள் இலங்குகிறாள் என்பது அடிப்படை உண்மையாகும். மொழிகள் அனைத்தின் மயமாக அவளைக் கருதுவது நல்ல உபாசனை யாகும்.

679. बृहत्सेना பிருஹத்சேனா—அளப்பரிய சேனையை உடைத்திருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஓர் அரசாங்கத்தின் வல்லமை அது படைத் திருக்கிற சேனையில் அடங்கியிருக்கிறது. பட்டாளத்தின் பலத்திற்கேற்ப ஆட்சிமுறை யும் பெரியதாகிறது. பழைய ஐதிகப்படி ரதம், கஜம், துரகம், பதாதி ஆகிய சதுரங்கசேனை பெரியதாகப் பாராட்டப்பட்டது. இன்றைக்கு இந்தச் சதுரங்க சேனையை ஒரே நாளில் ஒழித்துத் தள்ளுகிற ஆயுத பலத்தை மக்கள் உண்டுபண்ணியிருக்கிறார்கள். பழைய சது ரங்கசேனை நிலத்தில் மட்டும் உதவியது. இன்றைக்கோ நிலம், நீர், வானம் ஆகிய மூன்று இடங்களிலிருந்து கொண்டு பெரும் போர் நிகழ்கின்றது. The Land Force, the Sea Force, and the Air Force என மூன்று விதப் படைகள் பெயர் பெற்றுள்ளன. இவை யாவுக்கு மேலாக அணுசக்தியை வைத்துக் கொண்டு படையெடுத்துப் போகாமலேயே உலகத்திலுள்ள எந்தப் பகுதியை வேண்டு மானாலும் பாழ்படுத்துவதற்கான வல்லமையை மக்கள் பெற்றிருக்கின்றனர். இவை யாவை யும் ஒன்று கூட்டியே பிருஹத்சேனா என்று அம்பிகையைப் போற்ற வேண்டும். ஏனென் றால் மூலப்பிரகிருதியாகிய அம்பிகையினிடத் திருந்தே இவையாவும் வந்துள்ளன. அன்றொரு காலத்தில் பெரும் போர்வீரர்கள் மந்திர சக்தியைக் கையாண்டனர். ஆனால் இக் காலத்திய போர் வீரர்களோ ஒப்பற்ற முறை களில் ஜடசக்தியை நாசகாரியாகக் கையாளு கின்றனர். இத்தகைய சக்திகள் யாவும் மூலப் பிரகிருதியினின்றே வந்தவைகளாம். இவை யாவையும் குறித்துச் சிந்தனை பண்ணுவது நல்ல அம்பிகை வழிபாடு ஆகும்.

680. भावाभावविवर्जिता பாவ அபாவ விவர்ஜிதா — தோற்றம் ஒடுக்கம் ஆகிய இரண்டுக்கும் அப்பாற்பட்டவள் என்பது இதன் பொருள். பாவம் என்பது தோற்றம். அபாவம் என்பது விநாசம் அல்லது ஒடுக்கம். இப்பிரபஞ்சமும் அதில் உள்ள யாவும் ஒரு காலத்தில் தோற்றத்திற்கு வருகின்றன. மற்றோர் காலத்தில் அவையாவும் ஒடுங்கித் தோன்றாநிலை எய்துகின்றன. இங்ஙனம் தோற்றத்திற்கு வருவதும் பிறகு ஒடுங்குவதும் பிரகிருதியின் கூறு ஆகும். அக் கூறுகளிலே அன்னை பராசக்தி அடங்கியவள் ஆகமாட்டாள். விகாரங்கள் அனைத்தையும் தாண்டியுள்ள நிர்விகாரப் பெருநிலையிலே நிலைத்திருப்பவள் அம்பிகை. அவளுடைய வழிபாட்டுக்குத் தோன்றி மறைகிற பிரகிருதியைப் பயன்படுத்திக்கொள்ளலாம். ஆனால் போற்றப்பெறுகிற பராசக்தியோ தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் அப்பாற்பட்டவளாம். இக்கோட்பாட்டைச் சாதாரண வழிபாட்டிலேயே மக்கள் கையாண்டு வருகிறார்கள். அன்னை பராசக்தியின் வழிபாட்டுக்கு ஒரு பூரணகும்பம், வரையப் பெற்றுள்ள ஒரு சக்கரம், அமைக்கப்பெற்றுள்ள ஒரு யந்திரம், செதுக்கப்பட்டுள்ள ஒரு விக்ரகம், வனையப்பட்டுள்ள ஒரு பாண்டம் ஆகியவைகளை உபயோகப்படுத்துகின்றோம். அந்தந்தச் சின்னங்களினுள் அம்பிகை ஆவாஹனம் செய்யப்படுகின்றாள். வழிபாடுமுடிந்தான பிறகு அவள் விசர்ஜனம் செய்யப்பெறுகிறாள். உண்மையில் அவள் ஆவாஹனத்திற்கும், விசர்ஜனத்திற்கும் அப்பாற்பட்டவள். மக்களுடைய வசதிக்காக அவள் வரவேற்கப்பெறுகிறாள். பிறகு அவள் திருப்பி அனுப்பப் பெறுகிறாள். இப்படிச் செய்வதெல்லாம் வழிபாட்டில் மக்களிடத்துள்ள குறைநிலைக்கு ஈடுசெய்தல் பொருட்டேயாம். ஆதலால் ஆவாஹனமும் விசர்ஜனமும் அங்கீகரிக்கப்படுகின்றன. சாதனத்தில் தீவிரமாகச் செல்லுகிறவர்கள் அம்பிகை தோற்றத்திற்கும், ஒடுக்கத்திற்கும் அப்பாற்பட்டவள் என்பதையும், வரவேற்புக்கும், வழியனுப்புக்கும் அப்பாற்பட்டவள் என்பதையும் அறிந்திருத்தல் வேண்டும். அவள் யாண்டும் தன்மயமாய் இருக்கிறாள் என்னும் பாவனையில் ஊறியிருப்பது நல்ல வழிபாடு ஆகிறது.

681. सुखाराध्या சுக ஆராத்யா — இனிது போற்றப்பெறுபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

தெய்வ வழிபாட்டில் பல படித்தரங்கள் இருக்கின்றன. வழிபடு தெய்வம் சொருபத்தில் எவ்வளவு மேலானதோ அதற்கேற்றவாறு வழிபாட்டுக்குரிய நியமனங்களும் கடினமானவைகளாகின்றன. அம்பிகையினுடைய மந்திரத்தைப் பிழைபோம் பாங்கில் உச்சரித்தால் கேடு விளையும் என்னும் கொள்கை ஒன்று உண்டு. இக்கொள்கை கர்மகாண்டத்துக்குரியது. பக்தியின் பெருக்கால் பராசக்தியோடு இணக்கம் பூணுபவனுக்குச் சொல் உச்சரிப்புப் பிழை ஒருபொழுதும் பிழையாகாது.

திரிகரணங்களைப் பக்குவப்படுத்துவது இன்றியமையாத கோட்பாடாகும். ஆராதனைக்குரிய காலம் எது என்று வரையறுக்கப்பட்டிருக்கிறது. உபகரணங்கள் என்னென்ன பாங்கில் அமையவேண்டும் என்னும் கோட்பாடு உண்டு. அன்னபானாதிகள் இல்லாது உடலைப் பண்படுத்த வேண்டிய அவசியமும் உண்டு. நீராடுதல், உடைதரித்தல், முறையாகப் பிராணாயாமம் பண்ணுதல், சங்கல்பம் செய்து கொள்ளுதல், ஆசமனம்பண்ணுதல், கரநியாசம், அங்கநியாசம் முதலிய பூஜாவிதிகளை அனுஷ்டித்தல் இங்ஙனம் பலப்பல ஐதிகங்களும் கோட்பாடுகளும் ஆராதனைக்குரியவைகளாக அமைந்திருக்கின்றன. இவையாவும் பாராட்டுதற்குரியவைகளேயாம். நியமனங்களின் வாயிலாக ஆத்ம சாதகன் தன்னைப் பக்குவப்படுத்துவதற்கேற்ப ஆராதனையானது மேம்பாடடைவது திண்ணம். ஆனால் அம்பிகையின் வழிபாட்டில் இத்தகைய ஆசார அனுஷ்டானங்களுக்கெல்லாம் விதிவிலக்கு உண்டு. தாயினிடம் சேய் அணுகுகிறபொழுது அதற்குக் கட்டுமானம் ஏதுமில்லை. நீராடியான பிறகு தூய உடையணிந்துகொண்டு நெற்றியில் சமயச்சின்னம் அணிந்து கொண்டு, பாதசேவைக்குக் கையில் புஷ்பம் ஏந்திக்கொண்டு தாயை அணுகலாம். கட்டுமானத்தோடு கூடிய ஏற்பாடாகிறது இது. படுக்கையை விட்டு எழுந்தான உடனே குழந்தை தாயை நாடி ஓடலாம். பல் துலக்காமலும், முகம் கழுவாமலும் போகலாம். மலம், ஜலம் கழித்தான பிறகு உடலைச் சுத்தம் பண்

ணிக் கொள்ளாமலும் போகலாம். தற்செயலாகத்தன் உடலைத் தன்னுடையமலஜலத்தால் அசுசிப்படுத்திக் கொண்டிருக்கிற போதும் போகலாம். மேனியின்மீது உடை ஏதுமில்லாது நிர்வாணமாகப் போகலாம். அழுது கொண்டும் போகலாம், சிரித்துக்கொண்டும் போகலாம். நோய்வாய்ப்பட்டுக் கொண்டிருக்கும்பொழுதும் போகலாம். ஆரோக்கியமாய் இருக்கும் பொழுதும் போகலாம். தாயை அணுகுதற்குக் குழந்தைக்குக் கால நியதியில்லை. சூழ்நிலைநியதி இல்லை. முன்னேற்பாடு நியதி இல்லை. சேய் யாண்டும் தாயின் சொரூபத்தின் ஒரு பகுதியாதலால் அது தாயோடு எல்லாப் பாங்குகளிலும் இணக்கம் வைப்பதற்கு உரிமையுண்டு. இதே சுதந்திரம் அம்பிகையின் வழிபாட்டில் ஈடுபட்டுள்ள ஆத்மசாதகனுக்கு உண்டு. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் இதற்குச் சான்று ஆகிறார். பூஜா விதி எதையும் அவர் பின்பற்றவில்லை. தமக்குத் தோன்றிய விதங்களில் எல்லாம் அம்பிகையோடு ஒட்டி உறவாடினார். படைத்த நைவேத்யத்தில் ஒரு பகுதியைத் தாம் புசித்தார். மற்றொரு பகுதியை அம்பிகைக்கு ஊட்டினார். அம்பிகைக்கு அணிவித்திருந்த ஆடையின் முந்தானையைப் பிடித்துக் கொண்டு சுற்றிச் சுற்றி ஓடிவந்து விளையாடினார். அம்பிகையின் சயனத்துக்காக அமைக்கப்பட்டிருந்த கட்டிலில் தானும் படுத்துக்கொண்டு அம்பிகையோடு கொஞ்சி விளையாடினார். அன்னையை வழுத்துதற்குச்சாஸ்திரநியதி ஒன்றும் தேவையில்லை என்னும் கோட்பாட்டைப் பரமஹம்ச தேவர் தம்முடைய ஆராதனையின் வாயிலாக விளக்கிக் காட்டியிருக்கின்றார். ஆதலால் இந்த நாமத்துக்குத் தக்க பிரமாணமாக அவர் தாமே அமைந்திருக்கிறார்.

682. शुभकरी சுபகரீ — நலனையே செய்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

குபுத்திரன் உண்டு ஆனால் குமாதா இல்லை என்பது உலகவழக்கு. தாய் எத்தகைய கேடுடையவளாயிருந்தாலும் தன் சேய்க்கு அவள் தீங்கு ஒன்றும் செய்வதில்லை என்பது உலகம் அறிந்துள்ள விஷயமாகும். அம்பிகை துஷ்டதேவதை என்றும், முறைதவறி ஆராதித்தால் மரணம் நோய் முதலிய கேடுகளை அவள் விளைவிப்பாள் என்று அஞ்சுபவர்கள் உளர். ஆனால் பக்திபூர்வமாக ஆத்ம சாதகன் எத்தகைய வழிபாட்டில் ஈடுபட்டாலும் சாதகனுக்கு அவள் தீங்கொன்றும் செய்யமாட்டாள். அதுமட்டுமன்று, அவன் நல்வழியினின்று பிசகாதிருக்கும்படியும் அன்னை அருள்கூர்ந்து பார்த்துக்கொள்ளுகிறாள். தாம் சத்திய நெறியினின்று பிசகாதிருக்கும்படி தம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்று பரமஹம்ச தேவர் அம்பிகையிடம் பிரார்த்தனை பண்ணியிருந்தார். ஒருநாள் அவர் சொன்னபடி ஓர் அன்பர் இல்லத்துக்குப் போக மறந்துவிட்டார். அன்றிரவு அவர் நித்திரைக்குப் போனபோது படுக்க இடம் தராது ஏதோ ஒரு சக்தி உந்தித் தள்ளியது. தாம் ஏதோ தவறு செய்திருப்பதாக எண்ணிப் பார்த்தார். வாக்குக் கொடுத்தபடி யதுமல்லிகர் வீட்டுக்கு அவர் போகவில்லை. அதை உணர்ந்து அகால நேரத்திலும் அவர் ஆங்குச் சென்றுசொன்னசொல்லை நிறைவேற்றிய பிறகே அவர் திரும்பி வந்து தூங்க முடிந்தது. சுபகரீ என்னும் நாமத்துக்கு ஒப்ப அம்பிகை இந்தப் பாங்கில் தன் பக்தர்களைப் பேணி வருகிறாள்.

சிற்றுயிர்களாகிய விலங்குகள் பறவைகள் ஏனைய ஜந்து வகைகள் தம் தம் போக்கில் ஓலமிடுகின்றன. அது வெறும் ஓலமன்று. அந்த ஓசைகள் வாயிலாக அவைகள் தம்தம் இனத்துக்கு மகிழ்ச்சியை, விசனத்தை, ஆபத்தை எச்சரிக்கையை அல்லது வரவேற்பைத் தெரிவித்துக் கொள்கின்றன. உதாரணமாக ஓரிடத்தில் உணவுப் பொருள்கள் அதிகமாக இருந்தால் காக்கை ஒரு போக்கில் கரைகிறது. அதைக் கேட்டதும் மற்றவைகள் பறந்து ஓடி வருகின்றன. ஒரு காக்கைக்கு ஆபத்து வந்தால் அதற்கேற்ற ஓசை. உடனே மற்றவைகள் கரைந்து வந்து சேருகின்றன. இங்ஙனம் சிற்றுயிர்களுக்கு ஏற்ற பாஷைகளும் இருக்கின்றன. இதே விதத்தில் ஏனைய குரங்கு, மான், யானை போன்ற விலங்குகள் தங்களுக்கு இன்றியமையாத கருத்துக்களையும் உணர்ச்சிகளையும் மற்ற ஜந்துக்களுக்குத் தெரிவித்து வருகின்றன. இவைகளும் அம்பிகையிடத்திருந்தே உருவாகி வந்திருக்கின்றனவென்று நாம் பாராட்ட வேண்டும்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (164) மக்களைப் படைத்த கடவுள் அவர்கள் எல்லாரையும் மரணத்துக்கு ஆளாக்கியிருக்கிறார். ஏதோ ஓர் எதிர் காலத்தில் செத்தவர்கள் எல்லாரையும் அவர் ஒரு நொடிப்பொழுதில் எழுப்பு வார். எழுப்பியபின் அவர்களின் பாப புண்ணியத்தைப் பற்றி அவர் ஒரே நாளில் விசாரணை பண்ணி முடிப்பார். புண்ணியம் செய்தவர்களைச் சொர்க்கத்திற்கும், பாபம் செய்தவர்களை நரகத்திற்கும் அனுப்புவார். அந்தத் தீர்ப்பு தினத்தி னின்று யாரும் தப்பித்துக் கொள்ளமுடியாது. அவரவர் வினைக்கேற்ப நிரந்தர சொர்க்கமோ நிரந்தர நரகமோ வாய்க்கு மென்று சில மதவாதிகள் நம்பிவருகின் றனர். மற்றவர்களுக்கிடையில் மத மாற் றத்திற்கு இக்கொள்கையைப் போதித் தும் வருகின்றனர். வேதாந்தம் இக் கொள்கையைப் பற்றிப் பகருவது யாது?**

ஆசியாக் கண்டத்தின் மேற்குப் பகுதியில் யூதமதம் (Judaism) என்பது யூதர்களுக்கிடையில் உருவெடுத்தது. அந்த மதத்தினின்று கிளைகளாகப் பிரிந்து வந்தவைகள் கிறிஸ்தவ மதமும், இஸ்லாமிய மதமும் ஆகும். யூதர்களுடைய தெய்விகநூல் The Old Testament பழைய ஏற்பாடு ஆகும். இந்த மூன்று மதத்தவர்களுக்கும் இது பொதுவானது. பிறகு வந்த The New Testament புதிய ஏற்பாடு என்பது அலாதியாகக் கிறிஸ்தவர்களுக்கு உரியது. அதேவிதத்தில் குர்ஆன் என்பது இஸ்லாமியர்களுக்குரிய நூல் ஆகும். இந்த மூன்று மதவாதிகளுக்கிடையில் சமரஸம் கிடையாது. அவரவர் மதமே மேலானது என மூன்று மதத்தவர்களும் நம்பி வருகின்றனர். ஆனால் இக்கேள்வியில் எழுந்துள்ள தீர்ப்புத் தினத்தைப் பற்றிய கொள்கை மூவர்க்கும் பொதுவானது. இந்த மூன்று மதங்களோடு எந்தவிதமான தொடர்புமில்லாத புற மதஸ்தர்களும் நாஸ்திகர்களும் உலகில் ஏராளமாக இருக்கின்றனர். இன்னும் ஒரு பெருங்கூட்டத்தார் மதம் என்றால் என்ன என்பதை அறிந்து கொள்ளாமலேயே உலகில் எல்லா நாடுகளிலும் வாழ்ந்து வருகின்றனர். எவ்வளவுதான் மதபோதனை பண்ணினாலும் அதை அறிந்து கொள்ள முடியாத மாக்கள் கூட்டமும் உலகில் ஏராளமாக உண்டு. இத்தனை விதப் பாங்குடைய இத்தனைவித மனிதர்களைப் படைத்தது ஒரு தெய்வமா அல்லது பலப்பல தெய்வங்களா என்னும் கேள்விக்குச் சரியான விடை யாரும் தந்ததில்லை. யுக்தி பூர்வமாக ஒரு உண்மையை நாம் காண்கிறோம். மக்கள் எல்லார்க்கும் உடல் அமைப்பு ஒரே விதமானது. ஒரு மனிதனுடைய உடலில் எத்தனை எலும்புகள் இருக்கின்றனவோ, அத்தனை எலும்புகள் எல்லாருடைய உடலிலும் இருக்கின்றன. மானுட சரீரத்தின் வெப்பம் 98·4°F. இது எல்லார்க்கும் பொதுவானது. ஒரு மானுட சரீரத்தினுடைய ரத்தத்தை மற்றொரு மானுட சரீரத்திற்குப் பயன்படுத்தலாம். மருந்து வகைகள் இத்தனை பேருக்கும் பொதுவானவை. இவர்களுக்கிடையில் கலப்பு விவாகம் பண்ணிக் கொண்டு மகப்பேறு எடுப்பதும் சாத்தியம். சற்று ஏறத்தாழ உணவு வகைகளை எல்லார்க்கும் பொதுவாக எடுத்து வழங்கலாம். இறைவனுடைய சிருஷ்டியில் உள்ள நிலம் நீர் காற்று ஆகிய பூதங்கள் எல்லார்க்கும் பொதுவானவை. இதினின்றே சிருஷ்டிகர்த்தா ஒருவர்தான் இருக்கிறார் என்று யூகிக்கஇடமுண்டு.

மக்களைப் படைத்த கடவுள் ஓர் உயிர் பிறக்கும்பொழுது அல்லது பிறந்தவுடன் சாகும்படி செய்கிறார். பிறகு பிறந்தநாள் முதற்கொண்டு என்றைக்கு வேண்டுமானாலும் யாருக்கும் மரணம் நேரிடும். ஆயுளை நிர்ணயிக்க மனிதனால் முடியாது. ஒன்று குருடாகப் பிறக்கிறது. மற்றொன்று செவிடாகப் பிறக்கிறது. அங்கங்களில் குறைபாடுடைய உயிர்கள் கணக்கற்றவை பிறக்கின்றன. ஜடம் போன்று அறிவற்றவை பிறக்கின்றன. முன்னது பின்னதாக இவை யாவும் மடிகின்றன. தீர்ப்புத் தினம் என்றைக்கு வரும் என்று யாருக்கும் தெரியாது. மனிதன் அமைத்து வைத்துள்ள நீதிஸ்தலத்தில் விசாரணைக்கு நாள் குறித்துத் தெரிவிக்கின்றனர். படைத்த கடவுளோ அப்படித் தீர்ப்புத் தினத்திற்கு நாள் குறிக்கக்

கிடையாது. இந்த ஜெஹோவா ஆதிகாலத்தில் மக்களைப் பார்வை இட அடிக்கடி நிலவுலகுக்கு வந்துகொண்டிருந்தார். இப்பொழுது ஏனோ அவர் எட்டிப்பார்ப்பதே கிடையாது. இக்காலத்தில்தான் அவருடைய வருகைக்கு அவசியம் மிக உளது. ஜெஹோவா என்பது யூதமதம் கடவுளுக்குக் கொடுத்துள்ள பெயராகும். பரலோகத்திலிருக்கும் பிதா என்பது கிறிஸ்தவமதம் கடவுளுக்குக்கொடுத்துள்ள பெயராகும். அல்லா என்பது இஸ்லாமிய மதம் அவருக்குக் கொடுத்துள்ள பெயராகும்.

இனி இயற்கையின் பாங்கைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். மனிதனின் உயிர் வாழ்க்கைக்கு அன்னம், பானம், காற்று ஆகியவைகள் இன்றியமையாதவைகள். அன்னத்தை மலமாகவும், நீரைச் சிறுநீராகவும், காற்றை நச்சுக் காற்றாகவும் தன் வாழ்க்கையின் மூலமாக மனிதன் மாற்றுகிறான். அப்படி மாறியமைந்தவை ஏனைய ஸ்தாவர ஜங்கமங்களுக்கு உணவாகின்றன. இங்ஙனம் இயற்கையின் அமைப்பில் உண்ணும் உணவும், பருகும் நீரும், சுவாசிக்கும் காற்றும் ஒரே அளவில் இருந்துகொண்டு நிலைமாறி அமைந்துகொண்டு வருகின்றன. பத்தாயிரம் வருஷங்களுக்கு முன்பு மக்களுக்குப் பயன்பட்ட உணவும், நீரும், காற்றும் அதே அளவில் இருந்துகொண்டு இன்றைக்கும் இப்பொழுது இருப்பவர்களுக்குப் பயன்பட்டு வருகின்றன. சுருங்கச் சொல்லின் இயற்கையில் அமைந்துள்ள உண்டியும், பானமும், பிராணவாயுவும் எல்லையில் அடங்கியவைகளாம்.

இனி திடீரென்று தீர்ப்புத் தினத்தன்று கோடி கோடி கோடி மக்கள் தோற்றத்திற்கு வருவார்கள் என்று வைத்துக்கொள்வோம். பழங்காலத்தவர்களுக்கு எலும்பாகவும், சதையாகவும், ரத்தமாகவும், இருந்த பொருள்கள் இக்காலத்தவர்களுக்குப் பயன்பட்டு வருகின்றன. எட்டிய முன்னோர்களுக்குக் கடவுள் எங்கிருந்து கோடிக்கணக்கான உடல்களை எடுத்துக் கொடுப்பார்? ஒரு நாளைக்கு முன்பு செய்த செயல்களில் பலவற்றை ஒரு நாளைக்குப் பின்பு நாம் மறந்து விடுகிறோம். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நல்வினை தீவினை ஆற்றியவர்கள் அவை யாவையும் மறந்துவிட்டு ஜடநிலை எய்தினர். அன்னவர்களுக்கு உடலங்களைக் கொடுப்பதுமல்லாது மறைந்துபட்டுப் போன ஞாபக சக்தியையும் புதுப்பிக்கக் கடவுள் கடமைப்பட்டிருக்கிறார். அப்படிப் புதுப்பிக்கும்பொழுது உண்மையில் புதுப்பிக்கப்பட்ட மனிதன் வேறு, அன்று அழிந்துபட்ட மனிதன் வேறு ஆகிறான். பிறந்தவுடனே செத்த உயிர்களுக்குக் கடவுள் என்ன தீர்ப்புக் கொடுப்பார்? குருடு செவிடாயிருந்த உயிர்களுக்குக் கடவுள் என்னதீர்ப்புக் கொடுப்பார்? நலன் கேடு ஒன்றுமறியாது அப்பாவியாயிருந்தவர்களுக்கு அவர் என்ன தீர்ப்புக் கொடுப்பார்? எண்ணிக்கையில் அடங்காத பேர்க்கு ஒரே நாளில் தீர்ப்புக் கொடுப்பதும், தங்குதற்கு இடம் கொடுப்பதும், உண்ண உணவு தருவதும், பருகுவதற்கு நல்ல நீர் தருவதும் சாமானியமான செயலன்று. இப்பொழுது இருப்பதுபோன்று பல்லாயிரம் உலகங்களை உண்டுபண்ணினால்தான் ஓரளவு அவர்களுக்கு இடவசதி பண்ணித்தர முடியும்.

மக்கள் எல்லாரும் பாபம் புண்ணியம் ஆகிய இருவினைகளில் ஈடுபட்டவர்களே. முற்றிலும் பாபி என்று சொல்லுவதற்கோ, முற்றிலும் புண்ணியவான் என்று சொல்லுவதற்கோ யாருமில்லை. நூறு செயல்களில் ஐம்பத்தொரு செயல்களைப் பாபமாகவும், நாற்பத்தொன்பது செயல்களைப் புண்ணியமாகவும் செய்துள்ள, இருபத்தைந்து வயது வாலிபனொருவன் செத்துப் போகிறான் என்று வைத்துக் கொள்ளுவோம். ஜெஹோவா அன்னவனை நரகத்துக்கு அனுப்புவார். அவன் சாசுவதமாக நரகத்தில் திணறிக் கொண்டிருக்கவேண்டியது. இது அந்த ஆண்டவனுடைய ஆணையாகும். மற்றொரு யுவன் ஐம்பத்தொரு மடங்கு புண்ணியமும், நாற்பத்தொன்பது மடங்கு பாபமும் செய்தபின் மடிந்து போனான் என்று வைத்துக்கொள்ளுவோம். இதே தெய்வத்தின் தீர்ப்புப்படி பிறகு இவன் சாசுவதமாகச் சொர்க்கத்தில் இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருப்பான். மானுட நியாயாதிபதிகள் குற்றத்திற்கேற்ற தண்டனையை விதிக்கிறார்கள். ஆனால் இத்தெய்வம் காலமெல்லாம் கஷ்டப்படுவது அல்லது காலமெல்லாம் இன்புறுவது என்னும் பொருந்தாத தீர்ப்பைத் தருகிறார். நரகத்

திற்குப்போகிற கூட்டம்தான் எண்ணிக்கையில் மிகமிக அதிகமாக இருக்கும். அத்தனை பேருடைய நரக வேதனையை ஆண்டவன் பார்த்துக் கொண்டு ஆனந்தமாக இருப்பார். இத்தகைய தெய்வத்தைக் கருணாகரன் என்று கருதுவது எப்படி? இத்தகைய சொர்க்க நரக திட்டத்தில் யாருக்கு என்ன பிரயோஜனம் இருக்கிறது? ஆக இக்கொள்கை இயற்கைத் தத்துவத்தை யறியாத அறிவிலிகளால் கற்பிக்கப் பட்டது என்ற முடிவுக்குத்தான் நாம் வர வேண்டும்.

இனி, வேதாந்தக் கோட்பாட்டை ஆராய்வோம். யூத மதப்படி சிருஷ்டி ஒரே தடவை நடந்திருக்கிறது. மனிதனுக்கு ஒரே பிறவிதான் அமைந்திருக்கிறது. ஆனால் வேதாந்தக் கோட்பாட்டின்படி சிருஷ்டியும் பிரளயமும், பகலும் இரவும்போன்று இடையறாது நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. இச்செயலுக்குத் துவக்கமுமில்லை முடிவுமில்லை. பிரபஞ்சத்தைக் கடந்தவராகவும், பிரபஞ்சமயமாக அதனுள் ஊடுருவியும் இருக்கிறார் என்று கடவுள் என்ற சொல் பொருள்படுகிறது. கடந்தநிலையானது கடலின் அடிப்பகுதிக்கு நிகர். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலைச் செய்கிற பகுதி கடலின் மேற்பரப்புக்கு நிகர். அதீதத்திலிருக்கும் வஸ்து நிர்க்குணப் பிரம்மம் எனப்படுகிறது. அதே வஸ்து கிருத்தியங்களில் ஈடுபட்டிருக்கிற பொழுது சகுண பிரம்மம் அல்லது ஈசுவரன் எனப்படுகிறது. ஈசுவரன் தானே உலகங்களாகவும், உயிர் வகைகளாகவும் தோன்றிக் கொண்டிருக்கிறான். அவன் சத் சித் ஆனந்த சொரூபி. பேருயிர், பேரறிவு, பேரின்பம் என்பது அதன்பொருள். அத்தகைய ஈசுவரன் ஜெஹோவாவைப் போன்று ஒரு வடிவம் தாங்கியிருப்பவன் அல்லன். அவன் இயற்கை சொரூபமானவன்.

தீர்ப்புத் தினம் என்பது மனிதனுடைய உள்ளத்திலிருக்கிறது. அதனுள் மனச்சாட்சியாக இருந்துகொண்டு கடவுள் நலனையும் கேட்டையும் காட்டியருள்கின்றார். மனச்சாட்சிக்கு விரோதமாகத் தீங்குசெய்து துன்பப்படுகிறவன் அவ்வேளையில் நரகிலிருக்கிறான். பிறகு அவன் தன்னைத் தானே திருத்தியமைத்துக் கொள்ளுகிறான். இடையறாது இச்செயல் உலகெங்கும் மக்களுக்கிடையில் நிகழ்ந்து வருகிறது. அவர்களும் பண்பட்டு வருகின்றனர். இதைத்தவிர தீர்ப்புத் தினம் என்கின்றகற்பனை கொள்கைக்கு இயற்கையின் நடைமுறையில் சிற்றுயிர்கள் பலகோடி பிறவிகளில் பரிணமித்துப் பேருயிர்களாகின்றன. மனிதன் அவைகளுள் உச்சநிலையிலிருக்கிறான். தத்துவ விசாரம் செய்து பிரபஞ்சத்துக்கு அப்பாலிருக்கிற நிர்க்குணப்பிரம்மத்தில் லயமாவது வாழ்க்கையின் குறிக்கோள். பண்பட்ட மனிதன் இந்த நிலையை எட்டுகிறான். இப்பிரபஞ்சத்தில் சொர்க்கம் நரகம் என்பன அடங்கியிருக்கின்றன. அவையிரண்டும் தாற்காலிகமானவைகள். தான் செய்த தீவினைக்கேற்ப ஜீவாத்மன் ஒருவன் துன்பப்படுகிறான். அது நரகம். நல்வினைக்கேற்ப அவன் இன்புற்று இருக்கிறான். அது சொர்க்கம். அவரவர்க்குரிய சொர்க்க நரகத்தை வினைக்கேற்ப அவரவரே அமைத்துக் கொள்கின்றனர். வேறுயாரும் இதில் தலையிடுவதில்லை. சிற்றுயிர்க்கும் பேருயிர்க்குமிடையில் வித்தியாசம் பரிபாகத்திலிருக்கிறதேயொழிய அவைகளைப் பிரித்துவைத்துக் கடவுள் அமைத்திருக்கிறார் என்பது தத்துவமாகாது. இத்தனை கோடி உயிர்களும் ஈசன் என்னும் பேருயிரின் தோற்றங்களாக இருப்பதால் ஜீவகோடிகளனைத்தையும் நேசிக்க மனிதன் கடமைப்பட்டிருக்கிறான். உடலுக்கேற்ற உணவு வேற்றுமை இருப்பதுபோன்று, மனபரிபாகத்திற்கேற்பச் சமயங்கள் பல இருக்கின்றன. முறையாக அனுஷ்டித்தால் சமயங்கள் யாவும் மனிதனை அதீத நிலைக்கு எடுத்துச் செல்லுகின்றன. சகுணபிரம்மம் அல்லது ஈசனுக்கு மகிமைகள் பல இருப்பதால் அம்மகிமைகளை முன்னிட்டு அவன் பலப்பல தெய்வங்களாகக்கருதப்படுகிறான். பொருள் ஒன்று. அதற்குப் பெயர்கள் பல. சமயச் சண்டையும், என் தெய்வம் உன் தெய்வம் என்று தெய்வத்தைப்பற்றிய சண்டையும் அஞ்ஞானத்தினின்று உதித்தவைகளாம். இவ்வுண்மையை அறிகிற மனிதன் சண்டை சச்சரவுக்கு இடம் தராது சமரசத்தையே நிலை நாட்டுவான். வேதாந்தம் மதங்களுக்கிடையில் சமரசத்தை நிலை நாட்டுகிறது. மேலும் வேதாந்தம் ஒவ்வொருவருக்கும் அவரவர் நிலையிலிருந்து மேலே வர உதவுகிறது.

---

# வாசுதேவமனன விளக்கம்

(சுவாமி ஸதானந்தர்)

திரிகரணங்களால் நாம் கர்மம் செய்கிறோம். முக்கரண காரியங்களும் மூன்று விதமான வைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. 1. மானஸிக (மனதினால் செய்யப்படும்) புண்ணிய கர்மம், பாப கர்மம், இரண்டும் கலந்தது. 2. வாக்கினால் செய்யப்படும் புண்ணிய கர்மம், பாப கர்மம், இரண்டும் கலந்தது. 3. சரீரத்தால் செய்யப்படும் புண்ணிய கர்மம், பாப கர்மம், இரண்டும் கலந்தது. சகுண உபாசனை, நிர்க்குண உபாசனை, பக்தி, ஞானம், வைராக்கியம், அருள் நாட்டம் ஆகிய இவைகள் மனதினால் செய்யப்படும் புண்ணிய கர்மங்களாகும். விஷய போகங்களைப் பற்றிய எண்ணம், பிறருக்குக் கெடுதல் செய்யும் எண்ணம், நமது சாஸ்திரங்களிடத்து நம்பிக்கை இன்மை, தர்மமாவது அதர்மமாவது என்கிற எண்ணம் ஆகிய இவைகள் புத்தியினால் தீர்மானிக்கப்படுவதால் மானஸிக பாப கர்மங்களாகும். இவ் இருவகை எண்ணங்களும் கலந்திருப்பது மானஸிக மிஸ்ர கர்மமாகும்.

வேத அத்யயனம், கீதா பாராயணம், சாஸ்திரம் வாசித்தல், ஸஹஸ்ரநாம ஜபம், பஞ்சாக்ஷரம் முதலிய மந்திர ஜபம், பகவந் நாம சங்கீர்த்தனம், பரோபகாரமான வார்த்தைகள், உண்மை பேசுதல், மென்மையாக, அன்பாக, அனுதாபமாக, இனிமையாகப் பேசுதல் ஆகிய இவைகள் வாக்கினால் செய்யப்படும் புண்ணிய கர்மங்களாகும். வேத சாஸ்திரங்களைத் தூஷித்தல், தேவதைகளை நிந்தித்தல், பொய்பேசுதல், கோள் சொல்லுதல், பிறரை ஏளனம் செய்தல், பிறர் மனம் புண்படும்படி கடுமையாகப் பேசுதல் ஆகிய இவைகள் வாக்கினால் செய்யப்படும் பாப கர்மங்களாகும். வேதாத்யயனம், பூஜை ஆகிய புண்ணிய கர்மங்களுக்கிடையில் பிறரைப் பரிகசித்தல், லௌகிகமான பேச்சுக்கள், பொய் பேசுதல், நிந்தனை செய்தல் ஆகிய இவைகள் வாக்கினால் செய்யப்படும் மிஸ்ர கர்மங்களாகும்.

புண்ணிய தீர்த்த ஸ்நானம், குரு, தெய்வம் இவர்களை வணங்குதல், தேவதா பூஜை, சாதுக்களைத் தரிசித்தல், தியாகம், உலக நன்மைக்காகச் சஞ்சரித்தல் இவைகள் சரீரத்தால் செய்கிற புண்ணிய கர்மங்களாம். பிறரை ஹிம்ஸித்தல், பரஸ்திரீசங்கம், திருடுதல், துஷ்ட சகவாசம், முதலியவைகள் சரீரத்தால் செய்யப்படும் பாப கர்மங்களாகும். பிராம்மண போஜனம் செய்விப்பதற்காகப் பிறருக்கு உபத்திரவம் தருதல், கோவில் கட்டுவதற்காகப் பிறர் சொத்தை அபகரித்தல், தண்ணீர்ப் பந்தல் வைத்து அதில் வேலை செய்கிறவனுக்குக் கூலி கொடுக்காமல் இருப்பது ஆகிய இவைகள் சரீரத்தால் செய்யப்படும் மிஸ்ர கர்மங்களாகும். இதே கருத்துக்களைச் சுருக்கமாக விளக்கும் கீதா சுலோகங்கள் வருமாறு :

देव द्विज गुरु प्राज्ञ पूजनं शौचम् आर्जवम् ।
ब्रह्मचर्यं अहिंसा च शारीरं तप उच्यते ॥

தேவர், பிராம்மணர், குருமார், ஞானிகள் ஆகியவர்களைப் போற்றுவதும், தூய்மையும், நேர்மையும், பிரம்மச்சரியமும், அஹிம்சையும் தேகத்தால் செய்யும் தவம் எனப்படுகிறது. *(17—14)*

अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।
स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥

துன்புறுத்தாத வாய்மையும் இனிமையும் நலனும் கூடிய வார்த்தை, மற்றும் வேதம் ஓதுதல்—இது வாக்குமயமான தபசு என்று சொல்லப்படுகிறது. *(17—15)*

मनः प्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।
भावसंशुद्धिः इति एतत् तपो मानसं उच्यते ॥

மன அமைதி, அன்புடைமை, மௌனம், தன்னடக்கம், தூய நோக்கம்—இது மானஸ தபசு எனப்படுகிறது. *(17–16)*

வாசுதேவ மனனத்தில் திரிகரணங்களிலும் புண்ணிய கர்மம் என்று விளக்கப்பட்டவைகள் கீதையில் தவம் என்ற பகுதியில் விளக்கப்பட்டிருக்கின்றன. புண்ணியம் என்பது நல்ல கர்ம பலன். தபசு என்பது முயற்சி, நற்கர்மம். நல்ல காரியங்கள் அனைத்தும் புண்ணிய கர்மங்கள், தபஸ், யக்ஞம் என்றெல்லாம் சொல்லப்படுகின்

றன. விளக்க வந்த விஷயம் ஒன்றுதான். திரிகரணங்களால் செய்யப்படும் புண்ணிய கர்மாக்களைக் கீதை தபஸ் என்று விளக்குகிறது.

இப்படிக் கர்மங்களைப்பற்றி விவரமாக விசாரணை செய்து பார்ப்பதில் இரண்டு நன்மைகள் ஏற்படுகின்றன. 1. முக்கியபலன் 2. இடையில் ஏற்படுகிற பலன். வாழை மரத்தை வளர்ப்பதில் வாழைப்பழம் பெறுதல் முக்கிய பலன். வாழைப் பூ, இலை, தண்டு, நார் இவைகளை அடைதல் இடையில் கிடைக்கிற பலன். இதேபோன்று கர்மவிசாரத்திலும் இவ் இரு வகைப் பலன்களும் உண்டாகின்றன. எல்லாக் கர்மங்களும் மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களால் செய்யப்படுகின்றன. ஆத்மாவோ எனில் ஆகாசம் போல் பற்றற்றது, பிரிவற்றது, பூரணமானது, சைதன்யருபமானது (அறிவுமயமானது). ஆகையால் எந்தக் காரியத்துக்கும் ஆத்மா கர்த்தா ஆகமாட்டாது. ஆத்மா என்ற சொல்லுக்கு 'எல்லாவற்றையும் அடைகிறது அதாவது சர்வ வியாபகமானது, எல்லாவற்றையும் கிரகிக்கிறது, எல்லாவற்றையும் அனுபவிக்கிறது, அது நித்தியவஸ்து என்று பொருள் கூறப்பட்டுள்ளது. இவ்விதமாக, இந்நிலைமையில் ஆத்மா இருப்பதால் எந்தக் கர்மாவும் ஞானமயமான ஆத்மாவைத் தொடுவதில்லை என்று தெரிந்துகொண்டு, சந்தேகம் தெளிந்து அந்த ஆத்மாவே நான் என்கிற திடமான அனுபவத்துடன், ஆத்ம பாவனையுடன், ஆத்ம போதத்துடன் இருப்பது, ஜீவன் முக்திநிலை எய்துதல் முக்கியபலன் ஆகும். இந்த முக்கிய பலனை அடைதலே மானுட வாழ்வின் குறிக்கோள் ஆகும். நாம் பிரம்ம ஞானத்தைச் சுவானுபூதியில் அடைய முடியாவிட்டாலும் மனோவாக்குக் காயங்களால் புண்ணிய கர்மாவையே செய்துவர வேண்டும். அப்படிப் பூரண, புண்ணியகர்மானுஷ்டானம் முடியாத இடத்திலும் மிஸ்ர கர்மாவையாகிலும் செய்யவேண்டும். ஆனல் ஒருநாளும் பாபகர்மம் செய்யவே கூடாது என்கிற நல்லறிவு படிப்படியாக நமக்கு வருகிறது. பூரண ஞானமடைந்த ஒருவரின் வாழ்வு நமது சாஸ்திரங்களுக்குப் பிரத்யக்ஷ பிரமாணம் ஆகிறது. என்றென்றும் அவர்களது வாழ்க்கை தர்மத்துக்கு விளக்கமாகிறது, தலைமுறை தலைமுறையாக ஞானதீபம் நம் நாட்டில் எரிந்து கொண்டு வருகிறது. இவைகள் இடையில் கிடைக்கிற பலன்கள் ஆகின்றன. விசாரித்து அறிகிறவன் உண்மையை ஓர்கிருன், படிப்படியாக முடிவை அடைகிருன். அவன் விடா முயற்சி உடையவனுக இருந்தால் மெய்ப் பொருளை அடைந்தே தீருவான்.

**கேள்வி:** கர்மாவுடன் ஞானிக்கு எவ்விதச் சம்பந்தமுமில்லை. அவன் தாமரை இலை நீர் போல் இருக்கிருன். அவன் இதைச் செய்ய வேண்டும், இதைச் செய்யக் கூடாது என்கிற நிபந்தனை இல்லை. அவன் கர்மமற்றவன். நடக்கிற காரியங்கள் அனைத்தையும் சாட்சியாகப் பார்த்துக்கொண்டிருப்பவன். அவன் செய்ய வேண்டியதெல்லாம் செய்தாய்விட்டது என்று தீர்மானம், லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியானுல் அவனும் அக்ஞானி போன்று புண்ணிய கர்மாவையே அனுஷ்டிக்கவேண்டும் என்று எதற்காகச் சொல்லப்பட்டிருக்கிறது?

**பதில்:** ஞானிக்குச் சொல்லப்பட்டுள்ள லக்ஷணம் அனைத்தும் உண்மை. அப்படிப் பட்டவனுல் பாபகர்மம், தீவினை எதுவுமே செய்ய முடியாது. ரோஜாமலர், சந்தனம் இவைகளால் எப்படித் துர்க்கந்தம் வீசமுடியாதோ அப்படி நன்றுடையான் தீயதிலான் என்று இறைவன் போற்றப்படுகிருன். ஞானியினுல் தீவினை செய்ய முடியாது. அவனது செயல்கள் அனைத்தும் தர்மமாகவே, நன்மையாகவே இருக்கும். அவன் வியவகாரிகசத்தைத் தாண்டி பாரமார்த்திக சத்தில் நிலைத்திருக்கிருன். அங்கு ஏகத்வம், நிர்மலம், சத்-சித்-ஆனந்தம்தான் உள்ளது. ஏதாவது குறை இருந்தால்தான் சீர்தூக்குதல் சாத்தியப்படும். ஏழை பணக்காரன், மேடுபள்ளம், நல்லவன்கெட்டவன், அறிவாளி மூடன்என்கிற துவந்துவங்கள் உண்டாகும். அங்குக் குறை ஒன்றுமில்லை, எல்லாம் நிறைநிலை, பரிபூரணமாக இருக்கிறது. ஞான லக்ஷணமே இவ்விளக்கங்களை, கருத்துக்களைக் கொண்டிருக்கிறது.

மேலும் ஞானிகளில், ஞானம் அடைந்துள்ள நிலையில் நான்கு படித்தரங்கள் இருக்கின்றன. **1. பிரம்மவித் 2. பிரம்ம வித்வரன் 3. பிரம்ம வித் வரீயான் 4. பிரம்மவித் வரிஷ்டன்.** படித்தவன், பணக்காரன் என்று சொல்வதில்

எத்தனை படித்தரங்கள் இருக்கக்கூடும் என்பதை நாம் யூகிக்கலாம். அதேபோன்றது இதுவும். இப்பிரிவினைகளில் முன்னே சொல்லப்பட்டவர்களைவிடப் பின்னே சொல்லப்பட்டவர்கள் மேன்மைப்பட்டவர்கள். இவர்களுக்குள் பிரம்மவித் வரிஷ்டன்தான் விதேக முக்தன். இவனுடைய மனது வேலை செய்வதில்லை. மனதற்ற நிலை என்றும் சொல்லப்படுகிறது. இந்திரியங்கள் ஒவ்வொன்றுடனும் மனது சேரும்பொழுதெல்லாம் மனதில் ஏற்படும் அனுபவத்துக்கு, அது அடைகிற அறிவுக்கு விருத்தி என்று பெயர். இந்த விருத்தி மனதில் நிரந்தரமாக உண்டுபண்ணுகிற பதிவுக்குச் சம்ஸ்காரம் என்று பெயர். இந்தச் சம்ஸ்காரங்களின் தொகுப்பு மனிதனுடைய குணம், சுபாவம், இயல்பு ஆகின்றன. இதையே மனது வாசனை சொரூபமானது என்றும் சொல்லப்படுகிறது. மனமானது இந்திரியம் மூலமாக விஷயாதிகளுடன், புலன்களுடன் சம்பந்தப்படும்போது அதில் சைதன்யம் பிரதிபலிக்கிறது. அப்போது நமக்கு அறிவு ஏற்படுகிறது. இதை விருத்தி ஞானம் என்பார்கள். ஆத்மாவின் நிலை இதற்கு அப்பாற்பட்டது. அது பிரபஞ்சப் பொருள் அன்று, இந்திரியங்களால், அந்தக்கரணத்தால் அறியமுடியாதது. அங்கு விருத்தி ஒன்றும் இல்லை. ராக துவேஷங்களுடன் கூடிய மனதை அடக்காதவர்களுக்குத்தான் மனதில் விருத்திகள் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். சுஷுப்தியில் மனம் தாற்காலிகமாக ஒடுங்கிவிடுகிறபடியால் விருத்திகள் ஏற்படுவதில்லை. பிரம்ம வித்வரிஷ்டனுக்கு மனம் நிரந்தரமாக அடங்கிவிடுகிறபடியால், வேகம் கெடுத்தாண்ட வேந்தனடி சேர்ந்துவிட்டபடியால், லயித்துவிட்டபடியால் விருத்தி ஏற்படுவதில்லை. Mind is a bundle of thoughts என்பார்கள். நூல்கண்டில் நூலை அவிழ்த்து உபயோகித்துத் தீர்த்துவிட்டால் நூல்கண்டு தன் வடிவத்தை இழந்துவிடுகிறது. நூல்கண்டு என்று சொல்லுவதற்கு ஒரு பொருள் இல்லாது போய்விடுகிறது. அதேபோன்று விருத்தியற்ற மனது மனதற்ற நிலை ஆகிறது. இந்த மனதின் கற்பனைத் தோற்றமே இப்பிரபஞ்சம். மனதற்ற நிலையில் பிரபஞ்சம் இல்லை, நன்மை இல்லை, தீமை இல்லை. எல்லாம் ஆனந்த நிலை, பரிபூரண நிலை. இதுவே ஸத்தியம், இதுவே என்றுமுள்ளது. இதுவே பேரறிவு. இப்படிப்பட்ட உயர்ந்த ஞானிக்கு விதியோ கட்டுப்பாடோ இல்லை. மற்ற மூன்று நிலைகளில் உள்ள ஞானிகளுக்கும் விதிகள் இல்லை, கட்டுப்பாடு இல்லை. ஆனாலும் இந்நிலைகளில் மனது இருப்பதால், மனோநாசம் இன்னும் ஏற்படாததால் மனோ விருத்தியற்ற நிலை இல்லை. அவர்கள் உலக விவகாரங்களில் ஈடுபடும்போது விருத்திகள் ஏற்படுகின்றன. உயர்ந்த நிலையை அடையும் பரியந்தம் வேலிக்குள் வளரும் செடிபோன்று ஜிக்ஞாசுவும் (ஞான வேட்கையுள்ளவன்) அறநெறிக் கட்டுப்பாட்டிற்குள்தான் வளர்ச்சியடைய வேண்டும். மற்றவர்களுக்கு வழிகாட்டுவதற்காக அவர்கள் ஸதாசார சீலர்களாக இருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கண்ணாடியைத் துடைக்கிறோம், சுத்தமாகிறது. ஆனால் மறுபடியும் அழுக்கடைகிறது. கண்ணாடி உடைந்துவிட்டால் பிறகு அழுக்கடைகிற பேச்சு இல்லை. வெட்ட வெளியை மாசுபடுத்த முடியாது. தாமிரப் பாத்திரத்தைத் துலக்கினால் தங்கம்போன்று மின்னுகிறது. ஆனால் மறுபடியும் களிம்பு ஏறிப் பழைய நிறம் அடைகிறது. ஆனால் தங்கம் என்றுமே ஒரே நிறத்தில் ஒளிர்கிறது. மாசு நீங்கிய தாமிரம் தங்கமாகிறது. அதேபோன்று மனது என்று ஒன்று இருக்கும் பரியந்தம் அது மாசு அடைகிற சந்தர்ப்பங்கள் ஏற்படக்கூடும். ஆகையால் அது எப்போதும் ஸதாசாரத்தில் இருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

கர்மத்தில் ஈடுபட்டுள்ள உலக மக்களுக்கிடையில் இம்மூன்று வகையினர் இருக்கும்போது அவர்களைப் போலவே கர்மங்களைச் செய்து வரவேண்டும். உலகக் கிருத்தியங்களால் ஞானிக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. ஆயினும் உலக மக்கள் கர்மத்தின் மூலமாகவே முன்னேற்றம் அடையமுடியுமாதலால் அவர்களுக்கு முன்மாதிரிபோன்று நடக்க வேண்டும். ஆத்மாவிடத்துக் கர்த்ருத்வம் இல்லை. திரிகரணங்களே தொழில் புரிகின்றன என்பது திடமாகிறது. இதுவே தீர்மானம்.

# வாழ்க்கைப் பயன்

(சுவாமி ஆத்மானந்தர்)

உலகில் சமயங்கள் பல இருக்கின்றன. சமயங்கள் அனைத்துமே கடவுளை அல்லது வீடுபேற்றை அல்லது பேரானந்தத்தை அடைதற்குரிய வழிகளைக் காட்டித் தருகின்றன. பிறக்கும் பொழுதே சமயம் மனிதனுக்குச் சொந்தமாகி விடுகின்றது. ஒவ்வொரு மனிதனுக்கும் சமயம் பிறப்புரிமையாய் வந்து வாய்க்கின்றது. சமயத்தைத் தேடி மனிதன் ஓட வேண்டியதில்லை. சமயம் மனிதனை நாடி வருகின்றது. மனித வாழ்வில் சமயம் பேராதிக்கம் செலுத்துகின்றது. மனித வாழ்விலிருந்து சமயத்தைப் பிரிக்க முடியாத அளவிற்கு இரண்டும் ஒன்றையொன்று தழுவிக் கொண்டிருக்கின்றன. ஆயினும் மாந்தர் அனைவரும் சமயத்தை உள்ளபடி அறிந்திருக்கின்றனரா என்றால், இல்லை யென்றுதான் கூறவேண்டும்.

உலகிலுள்ள சமயங்களனைத்தும் இந்தியாவில் இடம் பெற்றிருக்கின்றன. சமயங்களுக்கு உறைவிடமாக இருப்பது இந்தியா என்று கூறலாம். நம் நாட்டில் உண்ணும் உணவுக்குப் பஞ்சம் ஏற்படுவதுண்டு. வயிற்றுப் பசியைப் போக்க வகையறியாது அரைப் பட்டினி, கால் பட்டினி கிடப்பவருண்டு. ஆனால் ஆன்மீகப் பசியைப் போக்க வகையறியாது பட்டினி கிடப்போரைக் காணுதல் அரிதிலும் அரிதாகும். சமயத்திற்கு இங்குப் பஞ்சம் என்பது கிடையவே கிடையாது. சமயம் தேவையான அளவு இங்கு இருக்கின்றது. ஏன், தேவைக்கு அதிகமாகவே இருக்கின்றது எனலாம். சமயத்தை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர முயலுவோரை விரல்விட்டு எண்ணிவிடலாம். சமயம் அனுபவத்துக்குரியதெனினும் அதை நடைமுறைக்குக் கொண்டுவர முயலுவோர் மிகச் சிலரேயாவர்.

मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये ।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥

''ஆயிரக்கணக்கான மனிதர்களுள் யாரோ ஒருவன் மனநிறைவின் பொருட்டு முயலுகிறான். முயலுகின்ற பெருவாய்ப்புள்ளோர்களுள்ளும் யாரோ ஒருவன் என்னை உள்ளபடி அறிகிறான்'' என்பது கண்ணபிரான் வாக்கு.

மனிதவர்க்கத்துள் பிறப்பில் உயர்வு தாழ்வு என்பது எதுவுமில்லை. ''பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்'' என்பது பொய்யாமொழி. ஆனால் சிறப்பால் மனிதன் தன்னை உயர்த்திக் கொள்ளுகிறான். உலகில் தோன்றிய மனிதர்களுள் மிகவுயர்ந்தவர்களென்று யாரைப் போற்றுகிறோம்? கல்வி கேள்விகளில் சிறந்தவர்களையோ, செல்வம் நிறைந்தவர்களையோ, பட்டம் பதவிகளில் உயர்ந்தவர்களையோ மிகப் பெரியவர்களென்று உலகம் போற்றுவதில்லை. பாரமார்த்திக வாழ்வில் ஈடுபட்டுப் பரமனருளுக்குப் பாத்திரமானவர்களையே உலகம் பெரியவர்களென்று போற்றுகின்றது. உலகிற்குப் பெருநன்மையைச் செய்தவர்கள் சமயாசாரியர்கள்தாம். அரசியல் வாதிகளும் ஏனையோரும் மாந்தரை அழிவுப் பாதையில் இட்டுச் செல்ல முயலுகின்றனர். ஆனால் சமயக் குரவர்களோ மாந்தரை அழிவற்ற பேரின்ப வீட்டிற்கு அழைத்துச் செல்ல முயலுகின்றனர். பொய்யை மெய்யென்று போதிப்பவர் அரசியல் வாதிகள். பொய்யைப் பொய் யென்றும், மெய்யை மெய்யென்றும் போதித்துப் பொய்யைப் புறக்கணித்து மெய்ப் பொருளில் நாட்டம் கொள்ளச் செய்பவர் ஆன்மீக வாதிகள். புலன்களைக் கட்டுப்படுத்தாதவர்கள் அரசியல்வாதிகள். புலன்களை அடக்கி அடிமைப்படுத்த முயலுபவர் ஆன்மீக வாதிகள். பிரபஞ்சத்தில் பற்றை வளர்ப்பவர்கள் அரசியல்வாதிகள். பிரபஞ்சப்பற்றைத் துறந்து தெய்வப்பற்றை வளர்ப்பவர்கள் ஆன்மீக வாதிகள். ஆன்மீகம்தான் நம்மையும் நம் நாட்டையும் உயர்த்த வல்லது.

ஒவ்வொரு தனிமனிதனுக்கும் வாழ்க்கையில் ஒரு லக்ஷியம் இருக்கவேண்டும். குறிக்கோள் இல்லாத வாழ்க்கை வாழ்க்கையே அன்று. மிருகங்களுக்குப் பகுத்தறிவு இல்லை. மிருகங்களுக்கு வாழ்க்கையில் குறிக்கோள் எதுவும் இல்லை. மனிதன் மிருகம் போன்றவனல்லன். பகுத்தறிவுடையவன் மனிதன். மனிதன் கடைப்பிடித்தற்குரிய குறிக்கோள்கள் பல இருக்கின்றன. இறை

வனே அடைவதுதான் மானுடவாழ்வின் மிக வுயர்ந்த குறிக்கோளாக இருக்கவேண்டும். உலகில் தோன்றிய சமயாசாரியர்கள் அனை வரும் இந்த உண்மையை ஒருங்கே உரத்த குரலில் கூறியிருக்கின்றனர். சென்ற நூற் ருண்டில் தோன்றிய பகவான் ராமகிருஷ்ணரும் இதே உண்மையைத்தான் கூறியுள்ளார். "மனிதனுகப் பிறந்தவன் இப்பிறவியிலேயே ஈசனை அடையமுயலவேண்டும். இல்லையேல் அவன் வீணில்பிறந்தவனேயாவான்" என்பது அவருடைய திருவாக்கு.

நாம் எதைச் செய்தாலும் அதன் பயனை எதிர் பார்க்கின்ருேம். பயன் கருதாது எந்தச்செயலை யும் செய்வதில்லை. உண்ணுதற்கும், உறங்குவ தற்கும், உடுத்துதற்கும்கூடப் பயனை எதிர் பார்க்கின்ருேம். எடுத்ததெற்கெல்லாம் பயனை எதிர்பார்க்கின்ற நாம், நமது வாழ்க்கைக்கும் ஒரு பயனை எதிர்பார்க்க வேண்டும். அவ் வாறு எதிர்பார்க்கின்ற பயன் மிகப் பெரிய தாக இருக்க வேண்டும். இம்மைக்குமட்டுமன்றி மறுமைக்கும் பயன் தரத்தக்கதாகவும் இருக்க வேண்டும். இப்பொழுது நாம் எவை உறு துணைகள் என்று எண்ணுகின்ருேமோ அவை யெல்லாம் நமக்கு உறுதுணையாக மாட்டா. உற்ருர் உறவினர், பெண்டுபிள்ளை, வீடுவாசல், பட்டம் பதவி, செல்வம் செல்வாக்கு இவை யாவும் உருப்படியான பயன் எதையும் தாரா. இன்றிருந்து நாளை அழிந்து போகும் இவை களைச் சதமென்று ஒருபோதும் கருதலாகாது.

"ஊருஞ்சதமல்ல உற்ருர் சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளும்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ்சதமல்ல நின்தாள் சதம்கச்சி யேகம்பனே"

என்பது பட்டினத்தார் பாடல். இறைவன் ஒருவனே நமக்கு என்றென்றும் உறுதுணை யாவான். நம்மை அவன் ஒருபோதும் கை விடுவதில்லை. நாம் நம்பிக்கை வைக்கின்ற உற்ருர் உறவினர்களெல்லாரும் ஒருநாள் நம் மைக் கைவிட்டு விடலாம். செல்வம் செழித்த காலை சேர்ந்திருப்போர் வறுமை வந்துற்ற போது விலகிப் போய்விடுவர். ஆனல் இறை வனே செல்வத்தையும் வறுமையையும் கருத் திற்கொள்வதில்லை. நாம் அவனை முழு மன தோடு நம்பினுல் போதும். நம்பிக்கைதான் தேவை. குழந்தையொன்று தன் தாயினிடத்து வைக்கின்ற நம்பிக்கையை நாம் இறைவ னிடத்து வைக்கவேண்டும்.

குழந்தை எல்லாவற்றிற்கும் தாயையே நம்பியிருக்கின்றது. அதன் தேவைகளைத் தாய் நிறைவேற்றி வைக்கின்ருள். அதற்கு வரு கின்ற துன்ப துயரங்கள் அனைத்தினின்றும் அதைக் காப்பாற்றுகின்ருள். அதேபோன்று நம்மிடத்து ஈசுவர விசுவாசம் இருக்கு மாயின், ஈசன் நம்மைத் துன்ப துயரங்கள் அனைத்தினின்றும் காப்பாற்றுவான். நாம் படுகின்ற துன்ப துயரங்களுக்கெல்லாம் கார ணம் நம்மிடத்தில் கடவுள் நம்பிக்கை இன் மையேயாகும். உற்ருர் உறவினரிடத்து வைக்கின்ற நம்பிக்கையளவு நாம் கடவு ளிடத்து நம்பிக்கை வைப்பதில்லை. பட்டம் பதவி, செல்வாக்கினிடத்து வைக்கின்ற நம்பிக் கையை நாம் இறைவனிடத்து வைப்பதில்லை. கடவுளிடத்து முழு நம்பிக்கை வைக்காத நாம் அவனது அருளை எங்ஙனம் பெறமுடியும்? "நம்பிக்கையில் குழந்தையைப் போன்று ஆனு லொழிய ஈசுவரனைக் காண்பது துர்லபம். யாரேனும் ஒருவனைச் சுட்டிக்காட்டி, 'அவன் உன் சகோதரன்' என்று தாயார் ஒரு குழந் தையினிடம் சொன்னுல், அக்குழந்தை அவள் சொல்வதை உண்மையெனவே நம்புகிறது. 'அங்குப் போகாதே, பிசாசு இருக்கிறது' என்று தாயார் சொன்னுல், அவ்விடத்தில் பிசாசு இருப்பதாகவே குழந்தை கருதும். இப் படிப்பட்ட குழந்தை போன்ற விசுவாசம் எவ னிடமிருக்கிறதோ அவனிடம் தான் ஈசுவர னுக்குத் தயை பிறக்கிறது. எல்லாவற்றிலும் கணக்குப் பார்க்கும் சுபாவத்துடனிருந்தால் ஈசுவரனைக் காணவே முடியாது என்பது ஸ்ரீராமகிருஷ்ணருடைய திருவாக்கு.

மாந்தர் அனைவரும் கடவுள் நம்பிக்கை உடை யவரல்லர். கடவுள் நம்பிக்கை அற்றவர்கள் மனிதவர்க்கத்துள் இருக்கத்தான் செய்கின்ற னர். கடவுள் நம்பிக்கை அற்றவனை நாத்திகன் என்று உலகம் தூற்றுகின்றது. நாத்திகன் என்ற சொல்லே தூற்றுதற்குரிய சொல்லாகத் தான் மக்களுக்கிடையில் வழங்கி வருகின்றது. கடவுள் நம்பிக்கையற்ற நாத்திகரது வாழ்வில் அமைதியைக் காணமுடியாது. அறநெறி

யைக் காணமுடியாது. மனம் போனபோக்கில் மிருகத்தனமான வாழ்க்கைதான் வாழ்ந்து வருவர். அவர்கள் எதையும் செய்யத் துணிவர். எப்படியாவது பொருளீட்ட முனைவர். புலனின்பத்தைத்தவிர அவர்கள் வேறொன்றை அறியார். புலன்களுக்கடிமைப்பட்டுச் சிற்றின்பச் சகதியில் சிக்குண்டு கிடப்பதைத்தான் அவர்கள் பேரின்பமெனக்கொள்ளுவர். மதுவும் மாதுவும் தான் அவர்களுடைய குறிக்கோளாக இருக்கும். இளமையைக் கூத்திலும் குடியிலும் தான் செலவிடுவர். மனிதத் தோல் போர்த்த விலங்குகள் என்றுதான் அவர்களைக் கூற வேண்டும். நெல்லில் பதர்போன்று அன்னவரை மனிதருள்பதர் என்றுதான் புறக்கணிக்க வேண்டும். நாத்தழும்பேற நாத்திகம் பேசித் திரியும் அவர்களுடைய முடிவுதான் என்ன? கடவுளுக்கு அடிமையாகாது குடிக்கும் கூத்துக்கும் அடிமைப்பட்டுக் கிடக்கும் அவர்களது வாழ்க்கை எப்படி முடியும்? இத்தகைய மதியிலிகளின் அல்லல் நிறைந்த அவல வாழ்க்கையைச் சொல்லரசாம் அப்பரடிகள் ஒரு பாடலில் படம் பிடித்துக் காட்டுகின்றார் :

" திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்
தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட்டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னிற்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத் [தும்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின் றாரே."
"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்"

என்பது பொய்யா மொழி. பூக்கைக் கொண்டு இறைவன் பொன்னடி போற்றாத ஆக்கை அருநோய்கள் குடியிருப்பதற்குரிய பெருங் கொட்டிலாகத்தான் இருக்கும். பிறத்தலும் மூத்தலும் பிணிபட்டு இறத்தலும் உடைய இடும்பைக் கொள்கலமாய் இருந்து மீண்டும் மீண்டும் பிறப்பதும் இறப்பதுமாய் இருப்பதுதான் அந்த ஜீவனின் தீவினைப் பயனாகும்.

நாம் என்ன செய்யவேண்டும் என்பதை மேலே காணும் அப்பருடைய திருப்பாடல் நமக்கு எடுத்தியம்புகிறது. ஈசனது நாமமாம் ஐந்தெழுத்தை நாத்தழும்பேற ஓதவேண்டும். ஈசனது பெரும்புகழைப் பேசவேண்டும். தினந்தோறும் திருக்கோயில் வலம்வந்து இறைவன் தாள் தொழவேண்டும். காலையும் மாலையும் கைதொழுவார்மனம்ஆலயமாகின்றது. பூமாலை புனைந்து பொன்னார் திருவடிக்கே அணிவித்தல் வேண்டும். தூய வெண்ணீறு புனைந்த நீறுமேனியராய்த் திகழவேண்டும். இவைகளெல்லாம் சமய அனுஷ்டானங்கள். இவற்றுள் ஏதேனும் ஒன்றையாகிலும் முறையாகச் செய்து வந்தால் அதுவே நம்மைப் பக்குவப்படுத்திப் பரமனருளுக்குப் பாத்திரராகும்படி செய்துவிடும். பகவானது திருநாமத்தை ஓதுதல் ஒன்று போதும். ஜன்மங்கள் பல எடுத்துச் செய்த வல்வினையை அதுதுகளாக்கும் அஸ்திரமாக இருப்பது இறைவன் அஞ்செழுத்தாகும். அகத்தும் புறத்தும் உள்ள இருளைப் போக்க வல்லது அஞ்செழுத்தாகும். பூவினுக்கருங் கலமாய் இருக்கும் தாமரைபோல், நாவினுக்கருங்கலமாய் இருந்து, நவிலும் அடியார்க்கெலாம் நன்மைகள் யாவும் தரவல்லது நமச்சிவாயம். இந்த நமச்சிவாயத்தை நாம் பிடித்துக்கொள்ளவேண்டும். ஓம் நமச்சிவாய, ஓம் நமச்சிவாய என்று ஓயாது ஓதவேண்டும். சிவனாருக்கு அமைந்த திருநாமங்களுள் நச்சினார்க்கினியன் என்பதுவும் ஒன்று. "நச்சுவார்க்கினிய நம்பா போற்றி" என்று போற்றுகின்றார் மணிவாசகப் பெருமான். ஈசனை அவனது நாமத்தைச் சொல்லி நச்சுகின்ற அளவுதான் அவனருளுக்குப் பாத்திரராகமுடியும். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப் பன்னாளும் பரவிப் பரவி அழைத்தால் அவன் இன்னருளைப் பெற்றிடலாம். இதில் ஐயமென்பது ஏதுமில்லை.

"சிவனெனு நாமந் தனக்கே உடையசெம் [மேனியெம்மான்
அவனெனை ஆட்கொண் டளித்திடு மாகில் [அவன்தனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரிந்துபன் [னாளழைத்தால்
இவனெனைப் பன்னாள் அழைப்பொழி யானென் [றெதிர்ப்படுமே"

என்பது அப்பர் திருவாக்கு.

ஈசன் நாமத்தை இரண்டொரு நாள் ஓதிய தும் அவனருளைப் பெறவில்லையே என்று சோர்ந்துவிடலாகாது. சொன்னதைச் சொல் லும் கிளிப்பிள்ளைபோல் ஈசன் நாமத்தை ஓதி னல் போதாது. மனம் ஒன்றி ஓதுதல் வேண் டும். "ஒன்றியிருந்து நினைமின்கள் உன்தமக் கூனமில்லை" என்கின்றார் அப்பரடிகள். முழு மனதோடு நாம ஜபத்தை ஓதவேண்டும். அருமருந்தனையது இறைவன் நாமம். அதற் குரிய ஆற்றல் அளப்பரியது. உடற்பிணி உளப்பிணியனைத்தையும் போக்கவல்லது. பிறவிப்பிணியையே வேரறுக்கவல்லது. ஈச னிடத்தும், ஈசன் நாமத்திலும் நம்பிக்கையற்ற நாம் எதற்கெடுத்தாலும் மருத்துவரை நாடி ஓடுகின்றோம். நமக்குள் இருக்கும் நோய் இன்னதென்று நாம் சொன்னலொழிய மருத்து வருக்குத் தெரியாது. உண்மையில் நமக்குத் தலைவலி இருக்கும்போது வயிற்றுவலி என்று சொன்னல் மருத்துவர் வயிற்றுவலிக்குத்தான் மருந்து கொடுப்பார். மருந்துகளின் பெயர் பட்டியலை உருப்போட்டு வைத்திருப்போர் தான் இன்று மருத்துவர் என அழைக்கப்படு கின்றனர். உலகில் ஈசனுக்கு நிகரான வைத்தியன் கிடையாது. சிவனுருக்குரிய திரு நாமங்களுள் வைத்தீசுவரன் என்பதுவும் ஒன்று. நஞ்சையும் அமுதாக்க வல்லவன் அவன். தன்னை அடைந்த அடியார்களுடைய அருநோய்கள் அனைத்தையும் போக்கவல்ல வன் அவன். அவனது திருநாமமாம் அஞ் செழுத்தை ஓதினலேபோதும். ஆலகால விட மும் அமுதமாய் மாறிவிடும்.

துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந் [திராதே
அஞ்செழுத் தோதிநாளும் அரனடிக் கன்ப [தாகும்
வஞ்சனைப் பாற்சோறுக்கி வழக்கிலா அமணர் [தந்த
நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளி யடிகளாரே

என்பது அப்பரது திருவாக்கு. அப்பரது பெருவாழ்வே இப்பாடலுக்கு எடுத்துக்காட் டாகும். தம் வாழ்க்கை அனுபவத்தையே இப் பாடலில் அப்பர் பெருமான் படம் பிடித்துக் காட்டுகின்றார். மதவெறிகொண்ட சமண சம யத்தார் அப்பருக்குத் தொல்லைகள் பல தந்த னர். நஞ்சை ஊட்டினர்; யானையை ஏவிக் கொல்ல முயன்றனர்; கல்லோடு பிணைத்துக் கடலில் தள்ளினர்; நீற்றறையில் இட்டு வேக வைக்க முயன்றனர். ஆயினும் அப்பர் பெரு மான் அஞ்செழுத்தோதியே அனைத்தினின்றும் விடுபட்டார். இறைவன் திருவடியைச் சரண டைந்த அவரைத் துன்ப துயரங்கள் அனைத் தினின்றும் ஈசன் காப்பாற்றினன். அடியார் படுதுயர் ஆயின எல்லாம் நிரந்தரமாக நீக்க வல்லவன் இறைவன். இவ்வுண்மையை நாம் அறிகின்றோமில்லை. இறைவன் திருநாமத்தின் பெருமையினையும், அவனது கருணைத் திறனை யும் அறியாத நம்மவரைப் பார்த்து அப்பர் இரங்கிக் கூறுகின்றார்.

இருந்து சொல்லுவன் கேண்மின்கள் ஏழைகாள்
அருந்த வந்தரும் அஞ்செழுத் தோதினல்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே.

மானுடப் பிறவி பெறுதற்கரியது. அதன் பெரும்பயனை நாம் பெற்றாகவேண்டும். மனித வாழ்க்கையை விழலுக்கிறைத்த நீராய் விரய மாய்ப் போகவிடலாகாது. பந்தபாசமும் மாசும் நிறைந்த நாம் அவற்றினின்று விடுபட முயல வேண்டும். மனத்தகத்துள்ள மலமாசு நீங்க விம லன் திருவடியைத் தொழவேண்டும். தொழு வார் வினையைப் பழுதாக்கும் பரமன் திருநாமம் ஓதவேண்டும். அஞ்செழுத்தை நாத்தழும்பேற நித்தலும் ஏத்தவேண்டும். மெய்யைப் பரமன் திருப்பணிக்குரியதாக்கவேண்டும். சுருங்கக் கூறின் மனம், மொழி, மெய் ஆகிய மூன்றை யும் இறைவனுக்குரியதாக்கி அவன் இன் னருளைப்பெற இடையருது முயலவேண்டும். இறைவன் திருவருளைப்பெற்று அவன் திரு வடியினைச் சேர்தலே நமது வாழ்க்கைப் பயனுகும்.

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்
துன்விரை யார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பிஉள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
சயசய போற்றியென்னும்
கைதான் நெகிழ விடேனுடை
யாயென்னைக் கண்டுகொள்ளே.

— மணிவாசகர்

# சுந்தரர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

இராமநாதபுரம் மாவட்டத்தில், திருபுவனம் என்னும் ஊருக்குத் தெற்கே பதினைந்து மைல் தொலைவில் திருச்சுழியல் என்னும் தலம் அமைந்துள்ளது. தற்போது திருச்சுளி என்று சொல்லுகிறார்கள். இறைவனின் திருப்பெயர் திருமேனிநாதர்; இறைவி துணைமாலைநாயகி. பார்வதிதேவியாரும், சதாநந்த முனிவரும் இத்தலத்து இறைவனைப் பூஜித்துப் பேறு பெற்றார்கள்.

இச்சிவஸ்தலத்துக்குச் சுந்தரர் எழுந்தருளி வருகின்றார்; இறைவனைப் பாடுகின்றார்.

"ஊனாய்உயிர் புகலாய் அகலிடமாய் முகில் பொழியும்
வானாய் வருமதியாய் விதிவருவானிடம் பொழிலின்
தேனாதரித்து இசைவண்டினம் மிழற்றும் திருச்சுழியல்
நானாவித நினைவார்தமை நலியார் நமன் றமரே."

—உலகில் உள்ள பல உயிர் இனங்களின் உடம்பாகவும், அவ்வுடம்புகளுக்குள்ளே புகக் கூடிய உயிர்களாகவும், மிகப் பெரிய நிலமாக வும், மழை பொழியும் வானமாகவும் இறைவன் திகழ்கிறான். அத்துடன், எல்லா உயிர்களும் வினைப்பயன்களை அனுபவிக்கக் கருவியாக விளங்கும் உள்ளமாகவும் திகழ்கிறான். இத் தகைய பெருமைமிக்க எம்பெருமான் இத் திருச்சுழியல் தலத்திலே எழுந்தருளியுள்ளார். இத்தலத்தை நினைத்துப் பலவாறு போற்று பவர்களை எமனின் ஏவலர்கள்கூடத் துன் புறுத்தமாட்டார்கள்.

இவ்வுலகில் கண்ணுக்குத் தெரியாத நுட்ப மான உயிர்களில் இருந்து யானை போன்ற மிகப்பெரிய உடம்புகளைப் பெற்ற உயிர் இனங் கள்வரை உள்ளன. இந்த உடம்புகள் தோன்று வதற்கு இறைவனே மூலகாரணனாக விளங்கு கின்றான்; இறைவனே பல உடம்புகளாகப் பரிணமித்துத் தோன்றுகின்றான். இறைவன் இல்லாமல் இந்த உயிர்களின் உடம்புகள் இல்லை. இறைவன் என்றும் அழியாத மெய்ப் பொருள். உடம்பு அழியக் கூடியதாக இருந் தாலும், இறைவனின் தோற்றத்துக்கு விளக் கம் தரும் வகையிலே உடம்பு அமைந்திருக் கின்ற காரணத்தால் உடம்புக்கும் மெய் என்ற பெயர் உண்டு.

எல்லா உடம்புகளையும் இறைவனின் வடி வங்களாகக் காண்பது ஆன்றோர் கொள்கை. "உன்னைச் சுற்றி இருப்பவர்களை உன் உறவி னர் என்று எண்ணாதே; ஆண்டவனின் வடி வங்களாக எண்ணுக" என்கிறார் பகவான் ராமகிருஷ்ணர்.

எல்லா உடம்புகளையும் இறைவனின் வடி வங்களாகக் கொண்டு வழிபட்டு வந்தனர் நம் முன்னோர்கள். சிவபிரானின் எருது, முருகப் பெருமானின் மயில், திருமாலின் கருடன், காளிதேவியின் சிங்கம்—இவற்றையெல்லாம் —இவ்வுயிர்களைக் கொண்ட உடம்புகளை யெல்லாம்—வணங்கி வந்தனர்.

"உயிர் புகலாய்"—உடம்புக்குள்ளே புகக் கூடிய உயிராகவும் இறைவன் திகழ்கின்றான். உடம்புக்குள்ளே இருக்கும் உயிரை ஆன்மா, ஆத்மா எனவும் கூறுவார்கள். உயிர் ஆகிய ஆத்மா வேறு; இறைவன் வேறானவன் என்று சில சாஸ்திரங்கள் கூறுகின்றன. இல்லை; ஆத்மாவுக்கும் இறைவனுக்கும் வேறுபாடு இல்லை; இறைவனே பல ஆத்மாக்களாகப் பரிணமிக்கின்றான்; ஆத்மாவை இறைவனாகக் காண்கின்றபோது பரமாத்மா; உயிர்கள் பெற் றுள்ள உடம்புகளுக்குள்ளே காணும் போது ஜீவாத்மா என்று சில சாஸ்திர நூல்கள் இயம்புகின்றன.

"பதி பசு பாசம் அநாதி"—இறை, உயிர், பாசம் ஆகிய மூன்றும் எப்போதும் உள்ளவை; பிறரால் படைக்கப்படாதவை என்றாலும், அந்த உயிரை உடம்புக்குள்ளே புகச்செய்வது இறைவனுடைய செயல்தான். இன்னின்ன உடம்பு இன்னின்ன உயிருக்குக் கிடைக்கும் என வகுத்து, அவ் உடம்புகளுக்குள்ளே அவ் வுயிரைப் புகுத்துவது இறைவன் செயலே. எனவே, உயிர் புகுவதற்குக் காரணமாக இருக்கின்றமையால் இறைவனே உயிராகத் திகழ்கிறான் என்று சொல்லுகிறார் சுந்தரர். எங்கும் நிறைந்த இறைவன் இந்த உயிருக்

குள்ளேயும் இருக்கத்தானே செய்கிருன்.

''அகல் இடமாய்'' மிகப் பரந்த நிலமாகவும் இறைவன் இலங்குகின்ருன். பார்க்கும் இடமெல்லாம் நீக்கமற நிறைந்திருக்கும் பரம் பொருளாக இறைவன் திகழ்கிருன். அங்கு இங்கு எனுதபடி எங்கும் பிரகாசமாய் இறைவன் இருக்கின்ருன் என்று தாயுமானவர் பகர்கின்ருர்.

மிகப்பெரிய நிலமாகவும் இறைவன் விளங்குகின்ருன் என்று சும்மா சொன்னல் போதுமா? சுந்தரர் ஏன் அவ்வாறு சொன்ஞர் என்பதைப் பற்றிச் சிந்தித்தல் வேண்டும்.

'' எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும்
அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு ''

என்பது வள்ளுவர் வாக்கு.

''பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற உண்மையைக் காண்பது '' என்கிருர் பரிமேலழகர். சாதிப் பெயர், குடிப் பெயர், இயற் பெயர், சிறப்புப் பெயர் ஆகியவை எல்லாம் நாமாகக் கற்பனை செய்து கொண்டு இட்டபெயர்கள் என்பது பரிமேலழகரின் கருத்து. இவ்வாறு மனிதர்களால் கற்பனை செய்து கொண்டு இட்ட பெயர்களை எல்லாம் மறந்து விட்டு, நிலம் முதல் உயிர் ஈருக உள்ள பொருள்களில் நிறைந்து நிற்கும் பொருளை, எல்லாவற்றிற்கும் அடிப்படைக் காரணமாக இலங்கும் பொருளைப்பற்றி நாம் சிந்திக்க வேண்டும். அப்படிச் சிந்தித்து, அந்தச் சிந்தனையின் பயனுக வருவதே, வள்ளுவர் கூறிய ''மெய்ப்பொருள்''. அம் மெய்ப் பொருளைக் காண்பதே பகுத்தறிவு பெற்றதன் பயனுகும் என்கிருர் பரிமேலழகர். ''நிலம் முதல் உயிர் ஈருக'' என்கிருர். எனவே, சுந்தரர் கூறிய அகல் இடம் ஆகிய நிலம் ஆகவும் திகழ்பவன் மெய்ப்பொருளாகிய இறைவன் என்பதைப் பரிமேலழகரின் கண்கொண்டு வள்ளுவர் குறளிலே காணலாம்.

'' பிருதிவி தத்துவம்'' என்று கூறுவார்கள். பிருதிவி என்ருல் நிலம். நிலமாகவும் கடவுள் விளங்குகின்ருர் என்பதை விளக்கிக் காட்டுவதற்குப் பிருதிவி லிங்கம் என்ற லிங்கத்தை அமைத்தார்கள் நம் முன்னேர்கள்.

'' முகில் பொழியும் வானுய் '' — மழை பொழியும் வானமாகவும் கடவுள் விளங்குகின்ருன். தனக்கு வேண்டிய உயிர், வேண்டாத உயிர் என்ற பாகுபாடு இல்லாமல் எல்லா உயிர்களுக்கும் கருணை காட்டுவது இறைவனின் இயல்பு. அதுபோல, வேண்டிய உயிர், வேண்டாத உயிர் என்ற வேற்றுமை வானத்திற்கு இல்லை. எல்லாருக்கும் மழை பொழிவது வானத்தின் இயல்பு. இரக்க குணத்திற்கும், கொடை வழங்குவதற்கும் உவமானமாக மழையைக் கூறுவார்கள். கடவுள் வாழ்த்து என்ற அதிகாரத்திற்குப் பிறகு வான்சிறப்பு என்ற மழையைச் சிறப்பித்துப் போற்றும் அதிகாரம் திருக்குறளிலே அமைந்துள்ளதைக் காணலாம். எம்பிரானின் திருக்கருணைப் பெருக்கு மழையின் பெருக்கைப் போலப் பெருக்கெடுத்துப் பொங்குகிறது. கார்மேகம் கண்ணனின் நிறம். கண்ணனின் அளப்பரிய கருணை மழை மேகம் போன்று பிரவாகமாகி எல்லாருக்கும் அருள் செய்யும் அன்ருே!

'' விதி வருவான் இடம் வருமதியாய் ''— உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும் விதியாகிய வினைப்பயன்களை அனுபவிப்பதற்கு ஆதாரமாக உள்ள மனமாகவும் இறைவன் திகழ்கின்ருன். செய்த வினைக்குப் பயன் உண்டு. நல்வினையோ தீவினையோ ஏதாவது ஒரு வினை வந்தே தீரும். வினைக்குப் பயன் உண்டு என்பதில் நம்பிக்கை உடையவர்கள் நாம். நல்வினையோ தீவினையோ எப்படி உண்டாகிறது? அவரவர் செய்யும் செயல்களை அடிப்படையாகக் கொண்டு அவ்வினைகள் அவ்வுயிர்களைப் பற்றுகின்றன. செய்யும் செயல்கள் எவ்வாறு உருக்கொள்ளுகின்றன? மனத்திலே தோன்றுகின்ற எண்ணங்களை ஆதாரமாகக்கொண்டு செயல்கள் நடைபெறுகின்றன. சரி; மனத்தில் அந்த எண்ணங்கள் எவ்வாறு உதயமாகின்றன? நாம் சிந்திக்கின்ருேம்; எண்ணங்கள் தோன்றுகின்றன. அவ்வாறு சிந்திக்க வைப்பவன் யார்? இறைவனே அங்ஙனம் சிந்திக்க வைக்கின்ருன். ''நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்'' அன்ருே இறைவன்! அவன் அன்றி ஓரணுவும் அசையாது என்பது பழமொழி அல்லவா! அவனுகிய அரன் இல்லாமல்

சிந்தனையும் இல்லை; செயலும் இல்லை. எனவே, சிந்தனை மூலம் மனத்திலே எண்ணங்களைத் தோற்றுவித்து எல்லா உயிர்களையும் செயல் செய்ய வைப்பவன் இறைவன்.

இம்மாதிரியான செயல்களை ஏன் இறைவன் செய்கிறான்? உயிர்கள் உலகத்தில் பிறந்ததன் காரணமே வினைப்பயனை அனுபவிக்கத் தான். வினைப்பயன் அனுபவத்தில் இருந்து எந்த உயிரும் மீளமுடியாது. செய்தபுண்ணிய பாவங்களுக்கு ஏற்றவாறு உயிர்கள் வினைப் பயன்களை அனுபவித்தே ஆகவேண்டும்.

"மீளா அடிமை உமக்கே ஆளாய்ப்
பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று
முகத்தால் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள்
அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர்
வாழ்ந்து போதீரே."

—திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் இறைவரே! உம்மைத் தவிர வேறு யாரையும் விரும்பாமல், உமக்கே எப்பொழுதும் அடிமைப் பணி செய்கின்ற அடிமை ஆள்களாகி நெறி பிறழாத வாழ்வு நடத்தும் அடியார்கள் தங்கள் மனத்திலே உள்ள துன்பங்களை வெளியிட விரும்பாமல் அடக்கி வைத்துக்கொண்டிருக்கின்றனர். மூண்டு எரியாமல், கனன்று கொண்டிருக்கின்ற தீயைப்போல, மனத்திற்குள்ளே வெதும்பி, தங்களுடைய வாட்டத்தை முகத்திலே தேக்கி வைத்துள்ளனர். அத் துன்பம் மிகுதி ஆவதால், தாங்கமுடியாமல், உன்னிடத்திலே வந்து முறையிடுகிறார்கள். நீர் அதனைக் கேட்டும் கேளாததுபோல இருக்கின்றீர். இதுதான் உமது இயல்பு என்றால், நீரே வாழ்ந்துபோம்!

சுந்தரர் தமது துன்பத்தை, மற்றவர்களின் துன்பத்தைப் போன்று முறையிடுகின்றார். இறைவன் தமக்கு அருள் செய்யவில்லையே என்ற அளவுக்கு மீறின வருத்தமான நிலை. அம்மிகுந்த வருத்தத்தில், தமக்கு வந்த துன்பத்தைப் பிறருக்கு வந்த துன்பத்தைப்போலக் கருதிக்கொண்டு பாடுகிறார்.

" தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயா கண்டுகொண் டாரைவர் காக்கிலும்
நாவாயா லுன்னையே நல்லன சொல்லுவேற்
காவாவென் பரவையுண் மண்டளி யம்மானே."

— இறைவா! உனக்குத் தொண்டு செய்கின்ற அடியார்கள் படுகின்ற துன்பங்களை நீக்கமாட்டாயா! என்னோடு இருக்கும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து பகைவர்களும் தங்கள் செயல்களால் உன்னை நான் அடைய விடாதபடி தடுக்கிறார்கள். அப்படித் தடுத்தாலும் என்னுடைய நாவால் உனது பெயரையே சொல்லி நான் துதி செய்கிறேன். எனக்கு இரக்கப்பட்டு, என்னுடைய பயத்தைப் போக்கக் கூடாதா? எனப் பணிந்து வேண்டுகிறார் சுந்தரர்.

இறைவனை அடைவதற்குப் பெருந் தடையாக இருப்பவை ஐந்து பொறிகளும், ஐந்து புலன்களும் ஆகும். அவை எவ்வளவு துன்பம் தந்தாலும், இறைவன் அருளைப் பெறுவதற்குத் தடை செய்தாலும் பொருட்படுத்தாமல் இறைவனையே சிந்தித்தல் வேண்டும்.

சோழநாட்டுத் திருத்தலங்களுள் ஒன்று திருவஞ்சைக்களம். திருநொடித்தான்மலை என்ற பெயரும் இத்தலத்திற்கு உண்டு. இவ்வுலக வாழ்வை இனியும் பொறுத்துக் கொண்டிருத்தல் முடியாது. மாய வாழ்வை நீக்கவேண்டும் என்ற எண்ணத்துடன், திருவஞ்சைக்களத்து அப்பனாகிய எம்பெருமானை இறைஞ்சுகின்றார் சுந்தரர்.

"தான்எனை முன்படைத்தான்
அதுஅறிந்து தன் பொன்அடிக்கே
நான்எனப் பாடல்அந்தோ
நாயினேனைப் பொருட்படுத்து
வான்எனை வந்து எதிர்கொள்ள
மத்தயானை அருள்புரிந்து
ஊன்உயிர் வேறுசெய்தான்
நொடித்தான்மலை உத்தமனே."

— திருக்கைலாய மலையில் வீற்றிருந்தருளும் எம்பெருமான்தான், என்னை இப்பூவுலகில் பிறக்கும்படியாக அருள் செய்தான். ஆகவே, அவனுடைய பொன்போன்ற திருவடிகளைப் புகழ்ந்து நான் என்னதான் பாடல்கள் பாடினேன்! அப்படிப் பாடாவிட்டாலும் கூட, என்னை இகழ்ந்து வெறுத்து ஒதுக்காமல், அவன் அடியார்களுள் ஒருவனாக ஏற்றுக் கொண்ட அருள் திறத்துக்கு என் கைம்மாறு

தான் யாது? இவ்வுடலோடு எனக்கு நற்கதி அளித்தான் எனப் போற்றிப் பாடுகின்ருர்.

"தான் எனை முன்படைத்தான்"—என்னை இப்பூவுலகில் பிறக்குமாறு செய்தவன் இறைவனே. சுந்தரரின் முற்பிறவி வரலாறு இங்கே சுட்டப்படுகிறது. மாதர்மேல் மனம் வைத்த காரணத்தால் மண்ணுலகில் பிறந்து, மாய விணை வசப்பட்டு மயங்கவேண்டிய நிலை சுந்தரருக்கு ஏற்பட்டது. இறைவனின் கட்டளைப் படியே இவ்வுலகில் வந்து பிறக்கின்ருர். இது சுந்தரரின் முற்பிறவிபற்றிய செய்தி.

அநாதியாக இருக்கும் உயிரை, அவ் உயிரின் பாவ புண்ணியங்களுக்கு ஏற்றவாறு வினைப்பயன்களை அனுபவிக்குமாறு இறைவன் செய்கின்ருன். உயிர்களிடத்தில் உள்ள கருணையால் இவ்விதம் செய்கின்ருன். உயிர்கள் வினைப்பயன்களை அனுபவிப்பதற்கு உடம்பு எடுத்தே ஆகவேண்டும். அவ்வாறு உடம்பு எடுத்துப் பிறப்பதற்கு இப்பூவுலகம் தவிர வேறு உலகம் இல்லை. எனவே சுந்தரர் உடம்பிலே உள்ள ஆன்மா வினைப்பயன்களை அனுபவிப்பதற்காக, இறைவன் சுந்தரரைப் படைத்தான்; பூமியிலே பிறக்கும்படியாகச் செய்தான்.

என் மீது கைலாயப் பெருமான் கருணைப் பெருந்திறன் கொண்டு மானிட வடிவம் கொடுத்து உலக இன்பங்களை நுகருமாறு அருளினுன்; என்னைப்பற்றி நானே அறிந்து கொள்வதற்கு ஒரு வாய்ப்பு அளித்தான். அவனைப்பற்றி யான் உணர்ந்து கொள்ளவும் அருள்பாலித்தான். அங்ஙனம் அருள் சுரந்த அண்ணல் எம்பெருமானை நான் எனது வாழ்நாளிலே என்னதான் பாடினேன்! ஒன்றும் புகழ்ந்து பாடிவிடவில்லையே! அப்படிப் பாடாமல் இருந்தாலும், அப்புல்லிய தன்மை நோக்கி என்னை இகழவில்லை. தன் அடியவர்களுள் ஒருவனுக என்னை ஏற்றுக்கொண்ட அவனுடைய கருணைத் திறந்தான் என்னே! என்னை இந்த மானிட உடலோடு ஏற்றுக்கொண்டான் என்கிருர் சுந்தரர்.

"பிறப்பு அறுக்கலுற்ருர்க்கு உடம்பு மிகை" பிறவித் தளையை வேர் அறுக்க என்னுபவர்களுக்கு இந்த உடம்பைப்பற்றிய அக்கறை இல்லை. இறைவன் திருவடிகளை அடைவதற்கு இந்த மானிட உடம்பு ஒரு தடையாக இல்லை. பஞ்சபூதங்களால் ஆன பௌதிக உடம்போடு இறைவன் தனது திருவடி நிழலில் சுந்தரரை இருத்திக்கொண்டான். அதனை எண்ணி வியக்கின்ருர் சுந்தரர்.

மண் உலகில் மக்களாய்ப் பிறந்து இறைவனைப் போற்றிப் புகழுகின்ற பழமையான அடியார்கள், பின்பு பொன் உலகமாகிய வீடுபேற்றை அடைவார்கள் என்று வேதங்கள் சொல்லுகின்றன. அவ் உண்மையை இன்று அடியேன் நேரிலே அனுபவத்தில் கண்டு கொண்டேன் என்கிருர் சுந்தரர் பெருமான்.

தேவாரத் திருமுறைகளில் இறுதியிலே அமைந்திருப்பது, சுந்தரர் பாடிய இத் திருநொடித்தான்மலைத் திருப்பதிகம் ஆகும். எனவே, சுந்தரர் பாடிய இப்பதிகத்தோடு தேவாரப் பாடல்கள் நிறைவு பெறுகின்றன.

ஓதாமல் ஒருநாளும் இருக்கவேண்டாம் என்பது முதுரை. அருள் நூல்களை நாள்தோறும் ஓதுவதன் மூலம் மனம் பரிபாகமடைகின்றது. தெய்வத்தின் அருள்பெற்றவர்கள் பாடிய நூல்கள் அருள்நூல்களாகின்றன. தேவாரம், திருவாசகம் அருள் நூல்களாகின்றன. அவற்றைத் தினந்தோறும் பாராயணம் பண்ணுவது நல்ல ஆத்மசாதனமாகின்றது.

தம் வாழ்நாளில் தேவாரம், திருவாசகம் பாராயணம் பண்ணுவதைச் சிலர் நியதியாகக் கொண்டிருப்பார்கள். அப்படி நாள்தோறும் உள்ளன்போடு பாராயணம் செய்கின்றவர்களுக்கு நல்ல கதி கிடைக்கும் என்பதைப் பலருடைய வாழ்க்கை அனுபவங்கள் நமக்கு உணர்த்தியிருக்கின்றன. இப்பதிகத்தைப் பாடித் தேவாரப் பாடல்களை நிறைவு செய்த சுந்தரரும் இவ்வாய்ப்பினைப் பெற்றுள்ளார் அன்றே! இறைவனைப் பாடினர்; இறைவன் திருவருளைப்பெற்று இறைவன் திருவடியடைந்தார் என்பதை அவருடைய வாழ்வு நமக்கு விளக்குகின்றது. சுந்தரர்போன்று நாமும் இறைவன் புகழைப்பாடி, இறைவன் பெருமையை நினைந்து, இறைவனுக்காகத் தொண்டு செய்து இறைவன் திருவருளைப் பெற்று இறைவன் திருவடியை அடைவோமாக. சுந்தரர் நமக்குக் காட்டிய வழி யாண்டும் நம் உள்ளத்தைப் பெருவாழ்வில் தூண்டி வருவதாகுக.

# கர்நாடக யாத்திரை

( சுவாமி சாந்தானந்தர் )

[ 117ஆம் பக்கத் தொடர்ச்சி ]

பிர்லா சத்திரத்தில் இடம் அமர்த்திக் கொண்டு சாமான்களை வைத்துவிட்டு 8-30 மணிக்குக் கிருஷ்ணன் கோவிலுக்கு வந்துவிட்டோம். கோவிலுக்குள் நுழைந்த உடனே சிறிய மாடத்தில் கண்ணன் எங்களுக்குக் காட்சியளித்தான். அது தன் பக்தன் கனகதாசன் வெளியில் இருந்தபடியே தன்னைத் தரிசிக்கும் படியாக எழுந்தருளியது. அந்த மாயக் கண்ணன் அன்று ஆயர்பாடியில் வெகு சேஷ்டை செய்து கோபிகளுக்கு ஓயாத இன்பத் தொல்லை, ஆனந்தத் தொல்லை கொடுத்தது போலவே இங்கும் எங்களைச் செய்துவிட்டான். சின்னக் கோவில், மேற்கு நோக்கிய சந்நிதி. முன்புறம் ஒன்பது துவாரங்கள் உள்ள ஜன்னல் வழியாகத்தான் கண்ணனைத் தரிசிக்க வேண்டும். அதற்குக் கதவு இல்லை. கூட்டம் அதிகம். எல்லாரும் முறையே வரிசையாக வந்து தரிசிக்க வேண்டும். அழகிய கண்ணனின் வடிவம் இரண்டரை அடி உயரம் இருக்கும். வலக்கையில் மத்தும் இடக்கையில் கயிறும் தாங்கியவனகக் காட்சி கொடுக்கிறான். அதைப் பார்த்ததும் கிருஷ்ண பக்தனுக்கு, கிருஷ்ணலீலைகள் எல்லாம் மனதில் அலை அலைகளாக எழுகின்றன. தாய் யசோதை தயிர் கடைந்து கொண்டு இருந்திருப்பாள். வெண்ணெய் கேட்டிருப்பான். கடைந்து எடுத்துப் புது வெண்ணெய் தருகிறேனடா என்று சொல்லியிருப்பாள். அவன் விளையாடப் போகவேண்டாமா, அவன் காத்திருக்க முடியுமா, கோபித்துக் கொண்டு அவள் கையிலிருந்து மத்தையும் கயிறையும் பிடுங்கிக் கொண்டான் போல் இருக்கிறது. தாயே, அக் கோமளக் கிருஷ்ணனை வளர்த்த நீயே பாக்கியசாலி. இந்த முழுக் கோலத்தையும் சரியாகப் பார்க்க ஒவ்வொருவரும் சுமார் பதினைந்து தடவை வலம் வந்து மீண்டும் வரிசையில் சேர்ந்து ஜன்னல் வழியாகப் பார்த்தோம். யாருக்கும் போதும் என்கிற எண்ணம் வரவில்லை. எங்களுக்கே அப்படியிருந்தால், நேரில் பார்த்த கோபிகள் எப்படித் திருப்தி அடைந்திருப்பார்கள்!

சந்நிதிக்கு வலப்பக்கம் சுற்றுப் பிரகாரத்தில் பூஜாரிகள் கர்ப்பக்கிரஹத்துக்குள் செல்ல ஒருவழி இருக்கிறது. சந்நிதிக்கு முன்னால் கருடன், ஆஞ்சநேயர் சந்நிதிகள் எதிர் எதிரே உள்ளன. அக்கோயில்களில் எண்ணெய் விளக்குகள் இருக்கின்றன. தர்சனத்துக்கு வருகிற பக்தர்களே அவற்றை ஏற்றுகிறார்கள். ஆலயத்திற்குள் பசுமாடுகள் சகஜமாகச் சுற்றித் திரிகின்றன. நாங்கள் சிறிது நேரம் வரிசையில் காத்திருந்தோம். சந்நிதி திறந்ததும் பார்த்தபோது மாயக்கண்ணன் புதுக்கோலத்தில் தோன்றினன். அவன் பசுவோடு நின்று கொண்டிருந்தான். அந்தப் பசுவுக்கு அவன் பேரில் எவ்வளவு அன்பு! அவன் காலை அது நக்கித் தருகிறது. பசு, வெண்ணெய், புல்லாங்குழல், கோபிகள், மாயம் இவைகள் எல்லாம் கிருஷ்ணனுடன் ஒன்றிப்போனவை, இணைபிரியாதவை. தர்சனத்தை முடித்துக் கொண்டு ஆலயத்தில் யாத்திரிகர்களுக்குச் செய்விக்கும் போஜனத்தைச் சாப்பிட்டோம். பின் விடுதிக்குச் சென்று தீராத விளையாட்டுப் பிள்ளையின் தெய்வ லீலைகளை நினைத்துக் கொண்டே தூங்கினோம்.

23-9-77 அன்று அதிகாலையில் எழுந்து கோவிலுக்கு முன் இருக்கிற குளத்தில் நீராடிவிட்டு ஐந்து மணிக்கு ஆலயத்திற்குச் சென்றோம். விசுவரூப தர்சனம் கண்டோம். அபிஷேகத்திற்காக அலங்காரத்தைக் கலைத்தார்கள். பாலகிருஷ்ணனைக் கண்குளிரக் கண்டோம். அபிஷேகம் செய்து மோஹினி (பத்மாவதி) அலங்காரம் செய்திருந்தார்கள். இடக் கையில் பூக்கூடையுடன் பச்சை சேலை கட்டி மிகவும் அழகாக இருந்தது. பூஜை நடந்தது, ஸ்ரீ கண்ணன் முன் ஐக்கிய வணக்கம் செய்தோம். கண்ணனைத் திரும்பத் திரும்பச் சுற்றி வந்து தரிசித்தோம். இந்த இரண்டு நாட்களில் எத்தனை தடவை தரிசித்தோம் என்று சொல்ல முடியாது. கண்ணனுடைய லீலைகளைச் சுற்றுப் பிரகாரத்தில்

படங்களாக வரைந்துள்ளார்கள். உள்ளம் கவர்கள்வன் என்பது எவ்வளவு பொருத்த மானது. இந்தத் தெய்விக உள்ளம் கவர் கள்வனே கனகதாசரின் பரிந்த பரிபூரணமான பிரார்த்தனைக்குக் கசிந்து தன் உள்ளத்தைக் கொடுத்துவிட்டான். நந்தனர் போன்று கீழ்க் குலத்தவர் கனகதாசர். நந்தனரை ஆலயத்தி னுள் நுழைய அனுமதிக்காதது போன்று இங்கும் வைதிகர்கள் கனகதாசரைக் கோவி லுக்குள் அனுமதிக்கவில்லை. நந்தனருக்குப் பரிந்து நந்தி விலகியது போன்று இங்கு ஸ்ரீ கிருஷ்ணன் தானே சுவரைத் துளைத்துக் கொண்டு கனகதாசருக்குத் தர்சனம் தந்தார். குழந்தைக்கு இரங்காத தாய் உண்டா? பக்த னுக்கு இரங்காத பகவான் உண்டா? உயர்ந்த அன்பைப் பெற்றிருத்தல் பெரிய பாக்கியம். ஸ்ரீ மத்வரால் பிரதிஷ்டை செய்யப்பெற்று அவ ரால் மிகவும் பிரேமையுடன் வழிபடப்பட்டு வந்த அந்த விக்ரஹம் விக்ரஹம் அன்று, அது சாக்ஷாத் கிருஷ்ணபகவானே. அது அவருடன் அன்பு பாராட்டியது, பேசியது, விளையாடி யது, அறிவு புகட்டியது, வழிகாட்டியது, அவருடைய அனைத்துமாக அது இருந்தது என்பது கனகதாசரால் உண்மை ஆயிற்று. நமக்கும் அவ்வளவுபகவத்பிரேமை இருந்தால் நாமும் ஸ்ரீ கிருஷ்ணனைக் காணலாம். சுவரில் வரைந்துள்ள எல்லா லீலைகளையும் காணலாம். கண்ணன் வாழ்க்கைச் சித்திரங்கள் அனைத் தும் பாகவதத்தில் வந்துவிட்டனவா? இன் னும் எத்தனைக்கோடி சம்பவங்கள் எழுதப்பட வில்லையோ, யார் அறிவார்? ஆகையால் இச் சித்திரங்களில் இல்லாத நிகழ்ச்சிகளையும் காணலாம். நம் ஊனக்கண் ஞானக்கண் ணாக மாறிவிடும். பகவானே உன் பொருட்டு அனைத்தையும் விட்டுவிட்டு உன்னைக் குறித்துக் கசிந்து உருக அருளமாட்டாயா என்று உருக்க முடன் அனைவரும் பிரார்த்தித்தோம்.

பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள சம்பந்தத்தைப் பற்றிய கோட்பாடுகள் மூன்று இருக்கின்றன. அவை அத்வைதம், விசிஷ் டாத்வைதம், துவைதம் என்பன ஆகும். துவைத மதத்தை நிலைநாட்டியவர் ஸ்ரீ மத்வர். கடவுளை உருவத்தில் வழிபடுதல், கடவுள் என் ஆண்டவன், யஜமானன், பிரபு, நான் அவன் தாசன் என்கிற பாவம் ஆகிய இரண் டும் துவைத மதத்தின் கோட்பாடுகள் ஆகும். இம்முறையினால்தான் அதி ஆச்சரியமான பக்திசாதனங்கள், பக்திபாவங்கள், பரா பக்தி உருவெடுத்தன. அது சமூகத்தில் பாமரர்க்கிடையிலும் சமயத்தை ஆழமாகப் பரப்பி வேரூன்றச் செய்துள்ளது. ஸ்ரீ மத்வர் உடுப்பிக்கு எட்டு மைல் தென்கிழக்கே உள்ள பஜகக்ஷேத்திரத்தில் பிறந்தார். அவருடைய வாழ்வில் பெரும்பகுதியை அவர் உடுப்பியில் கழித்தார். அவர் உடுப்பியில் ஸ்ரீ கிருஷ்ண னுக்குக் கோவில் கட்டி வழிபட்டது பற்றிய வரலாறு ஒன்று இருக்கிறது. கண்ணன் பிருந்தாவனத்தில் வாழ்ந்தபோது சிறைவாசம் செய்த தாயாகிய தேவகி, இளம் பிராயத்தில் தன் மைந்தன் செய்த பால லீலைகளையெல்லாம் பார்த்து மகிழ விரும்பினள். கமலக்கண்ண னுக்கு ஒரே ஆனந்தம். அடுத்தகணமே அவன் பாலன் ஆனன். பழைய விளையாட்டுப் புத்தி யும், குறும்புப் பார்வையும் மீண்டன. அவன் திருவிளையாடல்களையெல்லாம் கண்டு பரவச மடைந்தாள் தேவகி. இவற்றையெல்லாம் மறைந்திருந்து பார்த்து மகிழ்ந்தாள் ருக்மணி. ஸ்ரீ கிருஷ்ணனிடம் தான் வழிபடுவதற்குப் பாலகிருஷ்ண விக்ரஹம் ஒன்று வேண்டும் எனக் கேட்டாள் ருக்மணி. ஸ்ரீ கிருஷ்ணன் விச்வகர்மாவைச் செய்து தரும்படி சொன் னன். அவன் வலக்கையில் மத்தும், இடக் கையில் கயிறும் வைத்து அழகிய சிலை செய்து தந்தான். கிருஷ்ணவதார இறுதியில் துவார கையிலுள்ள ஒரு நந்தவனத்தில் அதை வைத்து இருந்தான் அர்ஜுனன். 4500 ஆண்டுகள் கடந் தன. 700 ஆண்டுகளுக்கு முன்பு சௌராஷ் டிரத்திலிருந்து வியாபாரச் சாமான்களுடன் ஒரு படகு தெற்கே வந்துகொண்டிருந்தது. திடீரென்று கடலில் கொந்தளிப்பு ஏற்பட்டுப் படகு கடலில் தத்தளித்தது. உடுப்பிக்கு மூன்று மைலில் உள்ள மால்ப்பே என்னும் இடத்தில் கடற்கரையில் மத்வர் தியானத்தில் வீற்றிருந் தார். படகிலுள்ள ஜனங்களின் ஆரவாரத் தையும் துன்பத்தையும் கண்டு மனம் கசிந்து மத்வர் தம் துண்டை வீசினர். கடல் கொந் தளிப்பு நின்று விட்டது. வியாபாரி கரைக்கு வந்து நன்றியுடன் வீழ்ந்து வணங்கித் தன்னிட

மிருந்து ஏதாவது அவர் காணிக்கையாகப் பெற வேண்டும் என்று வேண்டினன். மத்வர் படகில் இருந்த கோபி சந்தனக் கட்டிகளில் இரண்டு பெரிய கட்டிகளை மட்டும் எடுத்துக் கொண்டார். ஒரு மைல் நடந்து வந்ததும் ஒன்று வீழ்ந்து உடைந்தது. அதில் இருந்த பலராமர் சிலையை வடபண்டேசுவரர் என்ற கிராமத்தில் பிரதிஷ்டை செய்தார். மற்றக் கட்டியில் இருந்த ஸ்ரீ கிருஷ்ண விக்ரஹத்தை உடுப்பியில் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தார். எல்லாம் ஸ்ரீ கிருஷ்ணனின் ஆதேசப் படியே செய்து முடித்தார் மத்வர். ஸ்ரீ மத்வரின் கிருஷ்ண பிரேமையினல் உடுப்பி கிருஷ்ண பக்தர்களது க்ஷேத்திரமாக விளங்கி வருகிறது. மத்வருக்கு எட்டுச்சீடர்கள் இருந்தனர். எட்டு மடங்களை ஏற்படுத்தி ஒவ்வொருவருக்கும் ஒரு மடத்தின் பொறுப்பை ஒப்படைத்தார். தாம் வழிபட்டு வந்த எட்டு விக்ரஹங்களை யும் எட்டுச் சீடர்களுக்குக் கொடுத்தார். உடுப்பிக் கோயிலின் நிர்வாகத்தை முறையே ஒவ்வொரு மடத்து அதிபதியும் இரண்டு ஆண்டுகள் பார்த்து வரவேண்டும். தலைமைப் பொறுப்பில் உள்ள துறவிதான் அந்த விக்ர ஹத்துக்கு நித்தியம் பூஜை செய்து வரவேண் டும். மத்வர் செய்த இந்த நியமனங்கள் எல் லாம் அப்படியே நிகழ்ந்து வருகின்றன. ஸ்ரீ கிருஷ்ண மடத்தில் ஏழைகள், பள்ளி மாணவர்கள், யாத்திரிகர்கள் ஆகியோருக்குத் தினம் இரண்டாயிரம் பேருக்கு உணவு அளிக் கிறர்கள். திருப்பதியில் எழுந்தருளியிருப்பது பகவான் கனகப்பிரம்மம், பண்டரிபுரத்தில் எழுந்தருளியிருப்பது பகவான் நாதப்பிரம்மம், உடுப்பியில் எழுந்தருளியிருப்பது அன்னப் பிரம்மம் என்று சிறப்பித்துச் சொல்கிறர்கள். தர்மஸ்தலத்திலும் அன்னப் பிரம்மம் எழுந் தருளியுள்ளது எனலாம். வெள்ளிக்கிழமை களிலும் நவராத்திரியின் போதும் கிருஷ்ண னுக்கு ஸ்திரீ அலங்காரம் செய்வார்கள். மற்ற நாட்களில் தசாவதார அலங்காரமும், இதர அலங்காரங்களும் செய்வார்கள். தினமும் ஒரு அலங்காரம் செய்வார்கள். தாய் தனக் குப் பெண் குழந்தை இல்லாவிட்டால் மகனுக் குப் பெண் உடை உடுத்திப்பார்த்து மகிழ் வதில்லையா? அன்புள்ள பெற்றேர் தம் குழந் தைகளுக்கு, தங்கை தமக்கைக்கு, மனைவிக்கு இது அவர்களுக்குப் பொருத்தமாக இருக்கும், இதை அவர்கள் விரும்பிச் சாப்பிடுவார்கள் என்று பூ, துணி, பலகாரம், சாமான், புத்தகம் ஆகியவைகளை வாங்கிப் போவதில் லையா? இந்த மானுட இயல்புகளையெல்லாம் மனமோகனன், ஜகன்மோகனன் ஆகிய கண் ணனிடத்தில் செலுத்தித் தெய்வபக்தியை, பிரேமையை வளர்க்கிறர்கள்.

ஸ்ரீ கிருஷ்ணன் பூர்ணவதாரம், புருஷோத்த மன் எனப்படுகிறர். அவருடைய லீலைகளும், வாழ்வும் உபநிஷதங்களுக்கும் கீதைக்கும் வியாக்கியானம் போன்று அமைந்துள்ளன. இந்தியாவில் லக்ஷக்கணக்கான மக்கள் ஸ்ரீ கிருஷ்ணனைத் தம் இஷ்ட தெய்வமாகக் கொண்டு வழிபட்டு வருகிறர்கள். ஒன்பது துவாரம் உடைய ஜன்னல் மானுட சரீரத் தைக் குறிக்கிறது. இந்தச் சரீரத்திற்கு நவத் துவாரபுரி என்று பெயர். இந்தப் புரியில் வாழ்ந்துவரும் தேஹியானவன் உலக இன்பங் களைத் துய்த்தால் அவன் கீழ்மையடைகிறன். இவ்வுடல் துர்நாற்ற மெடுத்த மலக்கூடு ஆகி விடும். ஆங்கு இறைவனை எழுந்தருளப் பண்ணினல் இவ் ஊனுடம்பு ஆலயம் ஆகிவிடு கிறது. அதற்கென்றே மானுட ஜன்மம் அமைந் தது. **மூன்று மூன்ருய் உலகம் படைத்துத் தந்தான்** என்பது இவ்வுலகின் சொருப லக்ஷணமாகும். அலகிலா விளையாட்டுடை யான் எப்படி இப்பிரபஞ்சத்தை அமைத்துள் ளான் என்பதற்கு விளக்கமும் ஆகும். ஸ்ரீ சக்க ரத்தில் பல முக்கோணங்களை ஒன்றுக்குள் ஒன்ருய் அமைத்து இப்பிரபஞ்ச அமைப்பை விளக்கியிருப்பது போன்று ஒன்பது வாயில் ஜன்னல் இப்பிரபஞ்ச அமைப்பைக் குறிக் கிறது. கால, தேச, நிமித்தம் – சத்வம், ரஜஸ் தமஸ் – சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய மூன்று மும்மைகளுக்கும் அப்பாற்பட்டவர் பரம்பொருள். இறைவன் மனதீதப் பொருள் என்றும், பிரபஞ்சாதீதப் பொருள் என்றும், குணதீதப் பொருள் என்றும் விளக்கப்படு கிறர். அவரை வாக்கால் விளக்க முடியாது. **நீயலால் பிரிது மற்று இன்மை, ஒன்றும் நீ யல்லை உனை அன்றி ஒன்றில்லை** என்பது இறைவனைப் பற்றிய உண்மை. இவ்வுலகப்

பொருள் ஏதும் அவரன்று, அவரன்றி ஒரு பொருளும் இல்லை. ஆகையால் புலன்களுக்கு அப்பாற்பட்ட கடவுளை ஒன்பதுதுவாரம் உள்ள ஜன்னலின் வழியாகப் பார்ப்பது தான் உண்மையான தர்சனமாகும். ஸ்ரீரங்கத்தில் தாயார் சந்நிதிக்குப் போகிற வழியில் ஐந்து குழி, மூன்று வாசல்கள் இருக்கின்றன. அவற்றைக் கடந்து போய்த் தாயாரைத் தரிசிக்க வேண்டும். ஸ்ரீ ரங்கநாதரின் யோக நித்திரை, பள்ளிகொண்ட கோலம், நிர்க்குண, நிஷ்கிரியா, நிஷ்பிரபஞ்சநிலை. அதேபொருள் அதன் மகிமை, அதன் விபூதி, அதன் சக்தி பஞ்சபூதங்களாக, பஞ்சேந்திரியங்களாக, அவஸ்தாத்ரயமாக, இப்பிரபஞ்சமாக வடிவெடுத்திருக்கிறது என்பது அதன் பொருள். உடல் நிலையாமையை மனதில் அடிக்கடி ஞாபக மூட்டுவதற்கு ஒவ்வொரு சமயமும் ஒரு வழியைப் பின்பற்றுகிறது. சைவம் திருநீற்றையும், வைஷ்ணவத்தில் விசிஷ்டாத்வைதிகள் திருமண் நாமமும், மாத்வர்கள் கரியையும் நெற்றியில் இட்டுக் கொள்கின்றனர். மூன்றும் அக்கருத்தை விளக்குவதற்குச் சரியான சின்னங்களே. அதே போன்று ஐந்து குழி, மூன்று வாசல்களும், ஸ்ரீசக்கரமுக்கோண இணைப்புகளும், ஒன்பது துவார ஜன்னலும் ஒரு கருத்தையே புகட்டுகின்றன. நம் ஆசாரியர்கள் தத்துவங்களை எவ்வளவு எளிய முறையில் விளக்கமுயன்றுள்ளார்கள்.மந்தஅதிகாரிகளும் அதைப் புரிந்து கொள்ளவேண்டும் என்கிற அவர்களின் கருணையை என்னென்பது! அவர்கள் இறைவனே ஆகிறார்கள். ஸ்ரீ சங்கரரும், ஸ்ரீ ராமானுஜரும், ஸ்ரீ மத்வரும் பேர் ஆசாரியர்கள் ஆகிறார்கள். அவர்களுடைய அருளினால் அன்றோ இன்று நாம் சமய உணர்வு வாய்ந்தவர்களாக இருக்கிறோம்.

ஸ்ரீ கிருஷ்ணன் கோவிலுக்குத் தெற்கே சந்திர மௌலீஸ்வரர் கோவில் உள்ளது. அது சுயம்புலிங்கம். சந்திரன் தவம் செய்த இடம். இக்கோவிலுக்கு மேற்கே அனந்தேசுவரர் கோவில் உள்ளது. அதுவும் சுயம்புலிங்கம். மூலஸ்தான விமானம் நீண்ட வட்ட வடிவில் உள்ளது. கருங்கல்லே கூரையாக உள்ளது. இடப்புறம் விநாயகர் வெள்ளிக் கவசத்துடன் காட்சியளிக்கிறார். ஸ்ரீ மத்வரின் தந்தை நாராயணபட்டர், தாயார் வேதவதி. இருகுமாரர்களை இழந்த இவர்கள் அனந்தேசுவரரை வேண்டி வாசுதேவன் என்ற மகனைப் பெற்றனர். அச்சிறுவன் தன் எட்டாவது வயதில் ஸ்ரீ அச்சுதப்ரேக்ஷ தீர்த்தர் என்ற மகானிடம் சந்நியாசம் பெற்றான். அவரே ஸ்ரீ மத்வர். மத்வர் தம் சீடர்களுக்குப் பாடம் பயிற்றுவித்த இடம் அனந்தேசுவரர் கோயில். தம் சீடர்களுக்கு உபநிஷதம் சொல்லிக்கொண்டிருந்தபோது மறைந்து விட்டதாகச் சொல்லப்படுகிறது. சீடர்கள் மத்வருக்குச் சிலை வைக்க முயன்றார்களாம். என் தலையில் கல்லைத் தூக்கிப் போடப் போகிறீர்களா என்று அவர் கேட்டார். அதனால் அவருடையசீடர்கள் மத்வருக்குச் சிலை வைக்கவில்லை. அவர் இன்னும் சூக்ஷ்ம வடிவில் இருப்பதாக ஐதிகம். அவர் மத சமரஸம் நிறைந்தவர். அவருடைய கோட்பாடுகள் சமய வாழ்வில் பாலபாடம் போன்றவை எனினும் விதை முளைப்பதற்கு அத்யாவசியமாய் இருக்கின்ற மண், ஈரம், உஷ்ணம், சத்துப்போன்றவை அவை. அவைகளைப் பயன்படுத்தி விதை வளர்ந்து மரமாகிப் பயன் தருகிறது. முதலில் ஒன்றை நம்பி அதற்குமேல் யுக்தியைக் கையாண்டு உண்மைகளைக் கண்டறிந்தாக வேண்டும். அந்த முதல் நம்பிக்கை போன்றது துவைதம். இப்போது நிர்வாகத்தை நடத்திவரும் துறவி அவர்களை நாங்கள் யாவரும் தரிசித்துப்பிரசாதம்வாங்கிவந்தோம். ஸ்ரீகிருஷ்ணனை மீண்டும் ஒருமுறை தரிசித்துப் பிரார்த்தித்து விட்டுப் பிரியாவிடை பெற்று 10-30 மணிக்கு அங்கிருந்து கிளம்பினோம்.

நண்பகல் ஒரு மணிக்குக் கொல்லூர் வந்து சேர்ந்தோம். முதலில் நேரே ஆலயத்திற்குச் சென்று தர்சனம் செய்தோம். மூகாம்பிகை தேவி அழகிய சிறிய வடிவில் சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறாள். அவள் அழகு கண்களையும் உள்ளத்தையும் நிறைக்கிறது. அம்பிகைக்கு முன்னால் சுயம்புலிங்கம் உள்ளது. சிவத்தை ஆதாரமாகக்கொண்டுதான் சக்தி இயங்க முடியும் என்னும் தத்துவத்தை இக்கோயிலிலுள்ள சுயம்புலிங்கமும் அம்பிகையும் விளக்குகிறார்கள். வெளியில் துவஜஸ்தம்பம் பக்கமிருந்து முகம் பார்க்கும் கண்ணாடி மூலம் சுயம்புலிங்கத்தின்மேல் சூரிய வெளிச்சம் படும்

படி செய்கிறார்கள். அப்போது கர்ப்பக்கிர கத்தில் அம்பாள் அதி சோபையுடன் விளங்கு கிறாள். சுயம்புலிங்கத்தின் மத்தியில் தங்க ரேகை தெரிகிறது. அதைச் சிவம் சக்தி ஆகிய இரண்டும் சேர்ந்த லிங்கவடிவம் என்கிறார் கள். யாத்திரிகர்களுக்கு அர்ச்சகர்களே உணவு வசதி செய்து தருகிறார்கள். ஒரு அர்ச் சகர் வீட்டில் பகல் உணவு சாப்பிட்டோம். தேவஸ்தானத்தைச் சேர்ந்த விடுதி ஒன்றில் ஓய்வெடுத்துக் கொண்டோம். மேற்குத் தொடர்ச்சி மலையின் அடிவாரத்தில் கொல்லூர் உள்ளது. இயற்கை அழகு கண்களுக்கு விருந் தளிக்கிறது. சௌபர்ணிகா என்னும் நதியிலி ருந்து வரும் ஒரு கால்வாய் கோவிலின் முன் புறம் ஓடுகிறது. மாலையில் அதில் அனைவரும் குளித்தோம்.

மாலை 5-15 மணிக்குக் கோவிலில் சரஸ்வதி மஹாலில் அனைவரும் லலிதா சஹஸ்ரநாமம் சொன்னோம். பிறகு ஆலயத்திற்குள் சென்று அம்பாளைத் தரிசித்தோம். மாலையில் அம்பாள் யானை வாஹனத்தில் எழிலோடு காட்சியளித் தாள். நகை இல்லாமல் பச்சைப் பாவாடை உடுத்தி அம்பாளுக்கு அலங்காரம் செய்திருந் தார்கள். மார்பில் பச்சை மரகதக்கல் உள்ளது. அம்பாளுக்குப் பின்புறம் பிரகாரத்தில் ஸ்ரீ ஆதி சங்கரர் தியானம் செய்த ஆசனமும், அறையும் உள்ளன. அதற்குள் சென்று சில நிமிஷங்கள் தியானம் செய்து வந்தோம். அனைவருக்கும் சேர்ந்து அதற்குக் கட்டணம் ஐந்து ரூபாய். அம்பாளின் நகைகளை எல்லாம் காட்டினார்கள். எல்லா ஆலயங்களிலும் போன்று விநாயகர், சுப்பிரமணியர், வீரபத்திரன் ஆகிய சந்நிதி கள் உள்ளன. கன்னட தேசத்தில் உள்ள ஏழு முக்கிய ஸ்தலங்களில் இது ஒன்று. கோல மகரிஷி இங்கு உலக நன்மையின் பொருட்டுத் தவம் செய்தார். சிவபிரான் காட்சி தந்தார். அம்பாளைக் குறித்துத் தவம் செய்தார். அம் பாளும் தரிசனம் தந்தாள். பார்வதி பரமேசு வரனுக்கு அம்முனிவரின் சுயநலமற்ற லோகோபகாரமான தவம் மிகவும் பிரீதி அளித்தது. நாம் ஆலயங்களில் சென்று வழி படும்போது ஞானம், பக்தி, வைராக்கியம் கொடு என்று கேட்கலாம். செல்வம், புத்தி ரன் இப்படி எவையும் கேட்கலாகாது. உலக நன்மையின் பொருட்டு அர்ச்சனை வழிபாடு செய்யவேண்டும். உலக நன்மையில் நமது நன் மையும் அடங்கிவிடுகிறது. இக்கருத்தைப் புகட்டவே இக்கதை சொல்லப்படுகிறது. கோலமகரிஷியின் வேண்டுகோளுக்கு இணங்கி அம்மை அப்பர் இருவரும், முக்கியமாக அம்பாள் அங்குஎழுந்தருளிவருகிற பக்தர்களுக்கெல்லாம் முக்தி ஈறாக எல்லா நலன்களையும் அருள் பாலித்து வருகிறாள். ஆதலால் இவ்வூர் கோல புரம் என்றுபெயர் பெற்றது. பிறகு அது மருவி கொல்லூர் ஆகியது. கொடிய அசுரன் ஒரு வன் சிவபிரானைக் குறித்துத் தவம் செய்தான். தேவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி அம்பாள் அவ்வசுரனை மூகம் அதாவது ஊமை ஆக்கிவிட்டாள். அது முதல் அவன் மூகாசுரன் ஆனான். அவன் வெகுகோபம்கொண்டு தேவர் களை ஹிம்சித்தான். மீண்டும் தேவர்களு டைய வேண்டுகோளுக்கு இணங்கி அம்பாள் மூகாசுரனைக் கொன்றாள். அவனது மரணத் தறுவாயில் அம்பாள், அவனும் தனது குழந்தை என்று ஒருவரம் கேட்டுப்பெற அருளினாள். அப்போது அசுரனுக்குத்தாயின் ஒப்பற்ற, அள வற்றகருணை தெற்றென மனதில் விளங்கியது. தன்குற்றங்களை நினைத்து வருந்தினான். மூகாம் பிகை என்ற திருநாமத்துடன் இங்கு எழுந் தருளி பக்தர்களுக்கு என்றும் அருள் புரிந்து வரவேண்டும் என்று வேண்டினான். அப்படியே அம்பாள் செய்து வருகிறாள். தவம் எப்படி இருக்கவேண்டும், கடவுளின் அன்பு எத்தகை யது, அது கெட்டவர்களையும் நல்லவர்கள் ஆக்கிவிடுகிறது என்கிற உண்மைகளை இப் புராணம் நன்கு விளக்குகிறது.

இங்கு ஸ்ரீ சங்கரர் வந்து தபஸ் செய்திருக் கிறார். சுயம்பு லிங்கத்திற்குப் பின்னால் பஞ்ச லோகத்தில் அம்பாள் விக்ரஹத்தைப் பிரதிஷ்டைசெய்து வழிபட்டிருக்கிறார். இங்குக் கோவிலுக்குள் யாரும் எச்சில் துப்புதல், மூக்கு சிந்துதல், புகைபிடித்தல் கூடாது. மீறிச் செய் தால் அபராதம் போடுகிறார்கள். நம் ஆலயங் களிலும் நடைமுறைக்குக் கொண்டுவரவேண் டிய ஒரு நல்ல அம்சம் இது. வழிபாட்டை முடித் துக்கொண்டு அர்ச்சகர் வீட்டில் இரவு உணவு சாப்பிட்டோம். மனைவி, மக்கள், தான் எல் லாருமாகச் சேர்ந்து சிரத்தையுடன் பரிமாறி,

எச்சில் இலை எடுத்து அவர்கள் பக்தர்களை உபசரித்தது நமக்கு அவர்கள்பால் அன்பை வளர்க்கிறது. இத்தகைய சமரஸம் தமிழ் நாட்டிலும் பரவினல் எவ்வளவோ நன்மைகள் உண்டாகும்.

24—9—77 அன்று விடியற்காலம் எழுந்து சௌபர்ணிகா நதியின் கிளைநதியில் ஆனந்தமாகக்குளித்துவிட்டு ஆலயத்தில்ஐக்கியவணக்கம் செய்தோம். அம்பாளை இரவு பார்த்த கோலத்திலேயே கண்குளிரத் தரிசித்துவிட்டுஅர்ச்சகர் வீட்டில் காலைச் சிற்றுண்டி அருந்திவிட்டுக் காலை 7-15 மணிக்குப் புறப்பட்டு 11 மணிக்குக் கோகர்ணம் வந்து சேர்ந்தோம். திருச்செந்தூர் போன்று கடற்கரையில் கோகர்ண ஆலயம் அமைந்துள்ளது. இங்கும் அர்ச்சகர்களே தமது இல்லங்களில் தங்கும் வசதியும் உணவு வசதியும் செய்கிறார்கள். ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகள் குறிப்பிட்டுச் சொல்லிய அர்ச்சகர் வீட்டில் சாமான்களை வைத்துவிட்டு ஆலயத்திற்குச் சென்றோம். கோகர்ணத்தில் குளித்துவிட்டுத்தான் மூலஸ்தானத்திற்குள் செல்ல வேண்டும். ஆகையால் நாங்கள் நந்திவரை சென்று தரிசித்தோம். பக்கத்திலுள்ள விநாயகர் ஆலயத்தையும் தரிசித்தோம். அர்ச்சகர் வீட்டில் பகல் உணவு எடுத்துக்கொண்டு நன்கு ஓய்வு எடுத்தோம். மாலை 4-30 மணிக்குக் கடலில் குளித்தோம். ஆழமில்லாமலும், அலையும் ஒடுங்கி இருந்ததால் மிகவும் குதூகலமாகக் குளித்தோம். மலையழகும், கடற்கரையழகும் சேர்ந்து கோகர்ணத்தை அழகுபடுத்தியுள்ளன. மாலை 5-30 மணிக்கு மஹாகணபதி ஆலயத்திற்குச் சென்றோம். சிறிது நேரம் முன் மண்டபத்தில் பஜனை செய்தோம். இரண்டரை அடி உயரமுள்ள விக்ரகம், இரண்டு கரங்கள், நின்ற கோலம், தலையில் ஒரு பள்ளம் உள்ளது. நீரால் அபிஷேகமும், வில்வத்தால் அர்ச்சனையும் யாத்திரிகர்களே செய்யலாம். உள்ளே செல்லப் பதினைந்து பைசா கட்டணம் வைத்துள்ளார்கள். வீடுகளில் நாம் பூஜை செய்வது போன்று புனிதமான ஒரு க்ஷேத்திரத்தில் நாமே மூலவருக்கு ஆராதனை செய்வது மனதுக்குப் பரமதிருப்தியளிக்கிறது. தமிழ் நாட்டிலும் மூலஸ்தானத்தில் பக்தர்களே நேர் வழிபாடு செய்கிற வழக்கம் சில ஆலயங்களிலாவது இருந்தால் நன்றாக இருக்கும். பிறகு மஹாபலேஸ்வரர் ஆலயம் சென்றோம். பத்துப் பத்துப் பேராகக் கர்பக்கிரஹத்துக்குள் சென்றோம். மற்றவர்கள் முன் மண்டபத்தில் அமர்ந்துநாமஜபம்செய்துகொண்டிருந்தார்கள். மூலஸ்தானத்தில் மூன்றடி நீள அகல முள்ள பீடம்,அதில்ஆட்டுக்கல்லில்இருப்பதுபோன்று நடுவில் ஒரு குழி உள்ளது. குழியின் உள்ளே வெள்ளையாக ஏதோ ஒன்று அரைக்கால் அங்குலம் படிந்திருக்கிறது. அதற்குள்தான் அரை அங்குல கனமுள்ள சிறிய லிங்கம் உள்ளது. அதுதான் ஆத்மலிங்கம் எனப்படுகிறது. கையால் தடவிப்பார்க்கச் சொல்கிறார்கள். அந்த அமைப்புப் பார்க்கப் பசுவின் காது போன்று இருப்பதால்தான் அதற்குக் கோகர்ணம் என்ற பெயர் வந்தது. கோகர்ணம் என்றால் பசுவின் காது என்றுபொருள்படுகிறது. (தொடரும்)

---

# செய்திகள்

### நிகழ்பவை

ஏப்ரல் மாதம் 16ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை யன்று ஸ்ரீராமநவமியை முன்னிட்டுக் குருகுல மாணவர்கள் பகல் 12 மணி நேரம் அகண்ட நாமபஜனையும் மாலை 6-30மணி முதல் 7-30மணிவரை ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.

ஏப்ரல் மாதம் 23ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை யன்று தூத்துக்குடி A. S. K. இரத்தின சாமி நாடார் அவர்கள் கல்யாணமண்டபத்தில் நடைபெறும் சச்சிதாநந்தசபை ஆண்டு விழாவுக்கு ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர் அவர்கள் தலைமை தாங்குவார்கள்.

ஏப்ரல் மாதம் 24ஆம் தேதி திங்கட்கிழமை யன்று மாலை 3 மணிக்குமேல் ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல மாணவர்கள் கோடை விடுமுறைக்காக அவரவர் ஊருக்குப் புறப்படுவார்கள்.

மே மாதம் 2ஆம் தேதி செவ்வாய்க்கிழமை யன்று வட ஆற்காடு ஜில்லா மதனப்பள்ளியில் இரவு 7 மணிக்கு ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் பொதுமக்களுக்கு அருளுரை வழங்குவார்கள்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

திருவாசகம்-மூன்றும் பதிப்பு
பிரசார விலை ரூ. 14-00
ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரெண்டாம் பதிப்பு
பிரசார விலை ... 12-00
ஞானயோக விளக்கம் ... 8-00
ராஜயோக விளக்கம் ... 8-00
கர்மயோக விளக்கம் ... 7-00
பக்தியோக விளக்கம் ... 6-00
பரமஹம்சரின் பெருமை ... 6-00
விவேகானந்த விவரணம் ... 4-00
ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... 4-00
விவேகானந்த உபநிஷதம் ... 4-00
கடவுளின் வடிவங்கள் ... 4-00
சந்தேகம் தெளிதல் பாகம்-I ... 3-50
சந்தேகம் தெளிதல் பாகம்-II ... 3-50
ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ
ஆறும் பதிப்பு-பிரசார விலை ... 2-75
தினசரி தியானம்-பதினொன்காம் பதிப்பு
(பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை ... 2-75
ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் ... 2-00
தேவரகசியம் (முதலிய கதைகள்) ... 2-00
ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் ... 2-00
கண்ணன் என்னும் கடவுள் ... 2-00

தாயுமானவர் இயற்றிய
- பரிபூரணானந்தம் விரிவுரை ... 3-00
- ஆனந்தமானபரம் ஷை ... 3-00
- சுகவாரி ஷை ... 3-00
- எங்கும் நிறைகின்றபொருள் ஷை ... 2-50
- கருணாகரக்கடவுள் ஷை ... 2-00
- பரசிவ வணக்கம் ஷை ... 0-50

விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) ... 1-50
பஜனைப் பாடல்கள் ... 1-50
சந்நியாசி ... 1-25
குழந்தைகளின் களிக்கூடம் ... 1-00
இராவண தத்துவம் ... 1-00
சகோதரி நிவேதிதை ... 1-00
ஹரிச்சந்திரன் (நாடகம்) ... 1-00
காயத்ரீ ... 1-00
வாலிமோக்ஷம் (நாடகம்) ... 1-00
தவப்புதல்வர்கள் (நாடகம்) ... 1-00
ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) ... 1-00
அறம் வளர்த்த நம்பி ... 0-95
நோய்க்கு இடம் கொடேல் ... 0-80
நன்மக்களைப் பெறுதல் ... 0-80
தானவீரன் கர்ணன் (நாடகம்) ... 0-80

பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) ரூ. 0-80
பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) ... 0-75
இறை வணக்கம் ... 0-75
*ஆத்ம சக்தி ... 0-75
செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? ... 0-75
*மனிதனது நிஜசொருபம் ... 0-70
*சக்தி தத்துவம் ... 0-70
*சிவ தத்துவம் ... 0-70
பிரஹ்லாதன் (நாடகம்) ... 0-65
பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் ... 0-65
*ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் ... 0-60
இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ... 0-60
*ஆலய வழிபாடு ... 0-60
சைவன் யார்? ... 0-50
*சூரிய நாராயணன் ... 0-50
*முருகக் கடவுள் ... 0-50
*விஷ்ணு தத்துவம் ... 0-50
தெய்வீக மகிமைகள் ... 0-50
கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? ... 0-50
மார்க்கண்டேயன் (நாடகம்) ... 0-40
தபோபலன் (நாடகம்) ... 0-40
*கணபதி ... 0-40
நன்னெறிகளும் அருள்வாக்குகளும் ... 0-40
அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... 0-30

The Bhagavad Gita (9th Imp.) ... 15-00
The Indian National Education ... 8-00
Sri Lalithambika Sahasranama Stotram ... 8-00
Ramakrishna Lives Vedanta ... 8-00
Facets of Brahman or The Hindu Gods ... 5-00
Daily Divine Digest (with plastic-cover) ... 4-20
Mahabharata (with plastic cover) ... 4-50
Ramayana (do) ... 4-00
The Man Making Message of Vivekananda (with plastic cover) ... 3-00
The Bhagavad Gita (Small Size) (With plastic cover) ... 3-00
Sri Vishnu Sahasranama Stotram ... 2-50
Holy Bible—In the Light of Vedanta ... 1-50
*Introducing the Gita ... 1-50
*Key to Higher Life ... 0-75
*The Teacher ... 0-60
*The Student ... 0-45

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை-639 115, திருச்சி Dt.**

## ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல உயர்நிலைப்பள்ளி

திருப்பராய்த்துறை – 639 115, திருச்சி ஜில்லா.

### குருகுலத்தில் புதிய மாணவர்களைச் சேர்ப்பது சம்பந்தமான அறிக்கை

இந்தப் பள்ளியில் 4ம் வகுப்பு முதல் 10ம் வகுப்பு வரையிலும் உள்ளன. 8ம் வகுப்பும் அதற்கு மேலான வகுப்புகளிலும் புதிய மாணவர்களைச் சேர்ப்பது இல்லை. 4, 5, 6, 7ம் வகுப்புகளில் மட்டும் புதிய மாணவர்கள் சேர்த்துக்கொள்ளப் படுவார்கள். புதிய மாணவர்களைச் சேர்க்க விரும்புவோர் மே மாதம் 30ம் தேதி காலை 9 மணிக்குள் மாணவர்களுடன் இங்கு வரவேண்டும். அப்பொழுது மாணவர்களை நேரில் பார்த்து, அவர்களது உடல் நிலை, படிப்பு, வேறு இயல்புகள் இவற்றைப் பரிசோதித்து அவர்களுக்கு இடமளிக்கப்படும். மற்ற நாட்களில் மாணவர்களைச் சேர்ப்பது இல்லை. பரீட்சைகள் மே மாதம் 30ம் தேதி காலை 10-00 மணி முதல் முற்பகலிலும் பிற்பகலிலும் நடைபெறும். மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதற்கான முடிவுகள் அன்று மாலையிலும் இரவிலும் ஒவ்வொரு வகுப்பாக அறிவிக்கப்படும். இதற்காக விண்ணப்பத்தாள் எதுவும் எழுதியனுப்பவேண்டியதில்லை. மாணவனை எடுத்துக்கொள்வதாக அறிவித்தவுடன் பொறுப்புத்தொகை ரூ. 200ம், சாமான்கள் பொருட்டு ரூ. 150ம் ஆக ரூபாய் 350 முன் பணமாகச் செலுத்தி விடவேண்டும். இங்கு இடம் பெற்ற பிறகு, முன்பு படித்த பள்ளிக்கூடத்திலிருந்து பள்ளிக்கூட மாற்ற சர்டிபிகேட் வாங்கித் தந்தால் போதுமானது. உணவு, உடை, வாடகை, முட்டுவழி மற்றும் எல்லாச் செலவுகளுமாக வகுப்புக்கு ஏற்ப மாதம் ரூ. 140 முதல் ரூ. 160 வரை ஆகும். இலவசமாகவோ குறைந்த செலவிலோ மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதில்லை. போதனுமொழி தமிழ். மேலும் விவரம் வேண்டுவோர் 50 பைசா ஸ்டாம்பு அனுப்பிவைத்து "வித்யாவன குருகுல சட்டதிட்டங்கள்" என்ற சிறு புத்தகத்தைப் பெற்று விவரம் தெரிந்துகொள்ளுங்கள்.

V. சோமசுந்தரம்
*தலைமை ஆசிரியர்*

சித்பவானந்த
*தலைவர்*

---

### மாணவ மாணவிகளுக்கு விடுதி வசதிகள்

மாணவர்களைக் குருகுலக் கல்லூரியில் சேர்ப்பதற்கு:

விவேகானந்த கல்லூரி, திருவேடகம் மேற்கு-624 217 மதுரை மாவட்டம்.

குழந்தைகளை நர்ஸரியிலும், ஆரம்பப்பள்ளியிலும் (ஆண், பெண்) சேர்ப்பதற்கு:

ஸ்ரீ ஸாரதா பாலமந்திர், சேலம்-636007.

மாணவிகளை உயர்நிலைப்பள்ளியில் சேர்ப்பதற்கு:

ஸ்ரீ ஸாரதா வித்யாலயா, சேலம்-636 004.

மாணவிகளைக் கல்லூரியில் சேர்ப்பதற்கு:

ஸ்ரீ ஸாரதா கல்லூரி, சேலம்-636004.

என்ற விலாசங்களுக்கு எழுதித் தெரிந்துகொள்க.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.